# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



மே - 1982

வைகாசி

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

   வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

*விவரங்களுக்கு:*

தொலைபேசி: 71231

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# ஒரு முக்கிய வேண்டுகோள்

அன்புள்ளம் கொண்ட வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம். ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையைப் பலரும் படித்துப் பயன்பெறச் செய்வது ஒரு நல்ல தெய்விகத் தொண்டாகும்.

அன்பர்கள் தங்கள் ஊரிலுள்ள வாசகசாலைகள், நூலகங்கள், உயர்நிலைப் பள்ளிகள், படிப்பகங்கள், சங்கங்கள் ஆகியவற்றை அணுகி அங்கெல்லாம் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் வர வழைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யக் கோருகிறேன். அல்லது ஆர்வம் உள்ள அன்பர்களைக் கொண்டு அவற்றுக்காகச் சந்தாத் தொகையைக் கட்டச் செய்யலாம்.

உங்கள் ஊரிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளுக்கு, நீங்கள் படித்த உயர்நிலைப் பள்ளிக்கு, உங்கள் ஊரிலுள்ள பொது நூலகத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் அனுப்புவதற்குத் தாங்கள் சந்தா செலுத்தலாம். தங்கள் நன்கொடையாக அமையும் அதன்மூலம் பலரும் விஜயத்தைப் படிக்கும் வாய்ப்பு ஏற்படும்.

விஜயத்திற்குத் தனிப் பிரதி விற்பனை மிகவும் குறைவு. எனவே தங்கள் நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரின் மூலம் தங்கள் ஊரில் தங்கள் முயற்சியினால் குறைந்தது 20 புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

விருப்பமுள்ள அன்பர்கள், சத்சங்கங்களுக்கும் பொது நூலகங்களுக்கும் விஜயம் பத்திரிகையை அனுப்புவதற்குத் தாங்களே பணம் செலுத்தலாம். உதாரணமாக, ஒருவர் ரூ. 120 அனுப்பினால் 10 சத்சங்கங்களுக்கு ஒரு வருடத்திற்கு விஜயம் அனுப்பப்படும். அவ்விதம் பத்திரிகை அனுப்பப்படும் சத்சங்கங்களின் முகவரிகள் பணம் அனுப்பியவருக்குத் தெரிவிக்கப்படும். அல்லது தாங்களே பத்திரிகை அனுப்ப வேண்டிய முகவரிகளைக் குறிப்பிட்டும் பணம் அனுப்பலாம்.

இது போன்று தாங்கள் வசிக்கும் மாவட்டத்தில் அல்லது தாலுக்காவில் உள்ள பொது நூலகங்களுக்கும் உயர்நிலைப்பள்ளிக்கும் தங்கள் நன்கொடையாக விஜயம் பத்திரிகையைத் தாங்கள் அனுப்பலாம்.

விஜயம் சந்தாதாரர்களை அதிகப்படுத்தும் தெய்வப் பணியில் எங்களால் இயன்ற முயற்சிகளைச் செய்து வருகிறோம். இது சம்பந்தமான எங்களின் இந்த வேண்டுகோளை, பெரியோர்கள் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணிக்காமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற எல்லா முயற்சிகளையும் ஊக்கத்துடன் அவசியம் மேற்கொள்ள வேண்டுகிறோம்.

நிர்வாகி

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

# RAMAKRISHNA-VIVEKANANDA & VEDANTA LITERATURE

**SRI RAMAKRISHNA MATH**

16, Ramakrishna Math Road, Mylapore, Madras-600 004

| Title | | Rs | P. |
|---|---|---|---|
| Sri Ramakrishna The Great Master Volume I | Ordinary | 20 | 00 |
| | Deluxe | 35 | 00 |
| Sri Ramakrishna The Great Master Volume II | Ordinary | 20 | 00 |
| | Deluxe | 35 | 00 |
| The Visions of Sri Ramakrishna | | 6 | 25 |
| Sri Ramakrishna and His Mission | | 1 | 25 |
| The Gospel of Sri Ramakrishna (Volumes I & II) each | | 30 | 00 |
| The Gospel of Sri Ramakrishna (Airmail Tissue Paper) | | 60 | 00 |
| Sayings of Sri Ramakrishna | Ordinary | 8 | 00 |
| | Deluxe | 13 | 00 |
| Tales and Parables of Sri Ramakrishna | | 10 | 00 |
| Sri Ramakrishna Upanishad | | 4 | 50 |
| Sri Ramakrishna Karnamritam | | 4 | 50 |
| Aratrika Hymns and Ramnam | | 2 | 50 |
| Sri Sarada Devi, The Holy Mother Her Life & Conversations | Board | 14 | 00 |
| | Deluxe | 28 | 00 |
| Holy Mother Sri Sarada Devi | Ordinary | 18 | 00 |
| | Deluxe | 35 | 00 |
| Swami Vivekananda (For Students) | | 2 | 40 |
| Swami Vivekananda, Awakener of Modern India | | 4 | 00 |
| The Four Yogas of Swami Vivekananda : Condensed & Retold | | 10 | 00 |
| Inspired Talks | Ordinary | 6 | 00 |
| | Deluxe | 8 | 00 |
| Hinduism | | 2 | 75 |
| Education | | 3 | 00 |
| Invitation to Holy Company | | 6 | 00 |
| From Holy Wanderings to Service of God in Man | | 8 | 00 |
| The Eternal Companion | Board | 10 | 00 |
| | Deluxe | 14 | 50 |
| Swami Ramakrishnananda, The Apostle of Sri Ramakrishna to the South | | 4 | 50 |
| Swami Turiyananda | | 4 | 50 |
| Nagmahasaya | Ordinary | 3 | 50 |
| | Superior | 5 | 50 |

| Title | | Rs. | P. |
|---|---|---|---|
| Self Mastery | | 2 | 50 |
| Reincarnation & Immortality | | 3 | 00 |
| In the Lap of the Himalayas | | 5 | 00 |
| Hinduism, its Meaning for the Liberation of the Spirit | Ordinary | 10 | 00 |
| | Deluxe | 15 | 00 |
| How to know God | | 5 | 50 |
| Adventures in Religious Life | Ordinary | 8 | 00 |
| | Deluxe | 12 | 00 |
| Gems from the Upanishads | | 2 | 25 |
| Learn Sanskrit through stories | | 4 | 50 |
| Book of Daily thoughts and Prayers | | 20 | 00 |
| Service & Spirituality | | 10 | 00 |
| Meditation | | 6 | 00 |
| Concentration & Meditation | | 12 | 00 |
| Srimad Bhagavatam—The Wisdom of God | Board | 7 | 50 |
| | Deluxe | 12 | 00 |
| Saints of India | | 6 | 00 |
| Sri Krishna the Pastoral and the King Maker | | 5 | 00 |
| Life of Sri Ramanuja | Ordinary | 12 | 00 |
| | Deluxe | 22 | 00 |
| Spiritual Heritage of India | | 18 | 00 |
| Sankara Digvijaya | Ordinary | 10 | 00 |
| | Deluxe | 20 | 00 |
| The Path of Devotion | | 8 | 50 |
| The Upanishads | | 9 | 00 |
| The Master and the Disciple | | 5 | 50 |
| Sadhanas for Spiritual Life | | 5 | 00 |
| Vedanta in Practice | | 5 | 00 |
| Religious Lessons for Children | | 2 | 00 |
| The Goal and the Way | | 19 | 00 |
| Sri Ramakrishna (for Children) | | 4 | 00 |
| Yoga : Its Various Aspects | | 7 | 00 |
| The Story of an Epoch : Swami Virajananda and his times | Ordinary | 25 | 00 |
| | Deluxe | 30 | 00 |
| Meditations : its Process, Practice & Culmination | | 13 | 00 |
| A Primer of Hinduism | | 13 | 00 |
| Vividh Bhajan | | 6 | 00 |

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி 62 | மே—1982 | இதழ் 5 |
|---|---|---|

பொருளடக்கம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை
—திருமூலர்

| தொகுதி 62 | துந்துபி ஆ வைகாசி மீ | இதழ் 5 |
|---|---|---|

## பிரார்த்தனை

**नमः पङ्कजनाभाय नमः पङ्कजमालिने ।**
**नमः पङ्कजनेत्राय नमस्ते पङ्कजाङ्घ्रये ॥**

நம: பங்கஜநாபாய நம : பங்கஜமாலினே |
நம: பங்கஜநேத்ராய நமஸ்தே பங்கஜாங்க்ரயே

—ஸ்ரீமத் பாகவதம், 1—8—22

கொப்பூழில் தாமரையையுடைய, தாமரை மாலை பூண்ட, தாமரைக் கண்ணுடைய, தாமரைப் பாதங்களுடைய உனக்கு நமஸ்காரம்.

நினைந்திடு மனமே, நினைந்திடு ஹரியை,
மாசிலாப் பொருளை, சைதன்ய மயத்தை.
நினைந்திடு மனமே, நினைந்திடு ஹரியை,
அவரிடத் தொளிரும் சோதிக் கீடிலை.
மனத்தைக் கவரும்அம் மாய வடிவம்
அடியா ரிடத்தவர் அன்பையென் னென்பேன்!
ஆயிரம் மதிகளும் தண்மையில் நாணுறும்,
மலரும்அவ் அன்பினில் புத்தழகு அவிரும்,
அவன்வடி வின்புகழ் மின்னென வயங்கும்,
இன்பத் தாலுடல் புளகம் கொள்ளும்.

-- ஸ்ரீராமகிருஷ்ணரின் மொழியமுதம்



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

ஞாயிறு, செப்டம்பர் 21, 1884

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** ஆத்மசாதகன் ஒருவனுக்கு யோகசித்திகள் கைவரப்பெற்ருல் அது அவனது ஆன்மிக முன்னேற்றத்திற்கு ஒரு பெரும் தடையே ஆகும். இந்த உண்மையை நங்க்தா (தோதாபுரி) எனக்கு இவ்விதம் போதித்தார்: ஒரு சமயம் யோகசித்தி பெற்றிருந்த ஓர் ஆத்மசாதகன் கடற்கரையில் அமர்ந்திருந்தான். அப்போது திடீரென்று புயற்காற்று வீசியது. புயல் அவனுக்கு இடைஞ்சல் விளைவித்ததனுல் அவன், 'இந்தப் புயற்காற்று உடனே இப்போதே நின்றுவிட வேண்டும்' என்று சங்கல்பித்தான். யோகசித்தி பெற்றிருந்ததனுல் அவனது சங்கல்பம் சங்கல்பிக்கப்பட்ட மாத்திரத்திலேயே நிறைவேறியது.

புயல் வீசிக்கொண்டிருந்த சமயத்தில் ஒரு கப்பல் கடலில் காற்றை எதிர்த்துச் சென்றுகொண்டிருந்தது. விரைந்து வீசிய புயல் திடீரென்று நின்றுவிடவே, கப்பல் சாய்ந்து கடலில் மூழ்கி, அந்தக் கப்பலில் இருந்த பிரயாணிகள் அத்தனை பேரும் கடலில் மூழ்கி இறந்தனர். அத்தனை பேரும் இறந்துபோன பாவம், கப்பல் கடலில் மூழ்குவதற்குக் காரணமாக இருந்த அந்த ஆத்மசாதகனை வந்தடைந்தது. அவ்வளவு பாவத்தின் விளைவாக அவனது யோகசித்திகள் எல்லாமும் அவனிடமிருந்து மறைந்து போயின. மேலும், அவன் நரகத்திற்குச் சென்று நரக வேதனையை அனுபவிக்கவும் நேர்ந்தது.

முன்பு ஒரு காலத்தில் சாது ஒருவர் வசித்து வந்தார். அவரிடம் மகத்தான யோகசித்திகள் இருந்தன. மேலும், யோகசித்திகள் பெற்றிருந்தது காரணமாக அவரிடம் அகங்காரமும் இருந்தது. எனினும் அவர் மிகவும் நல்லவர். தவத்திலும் அவர் நன்கு ஈடுபட்டு வந்தார். ஒரு நாள் கடவுள் ஒரு சந்நியாசியின் வடிவத்தில் அந்தச் சாதுவிடம் சென்று, ''சுவாமி, தாங்கள் பல சித்திகளைப் பெற்றிருப்பதாகக் கேள்விப்பட்டேன், உங்களைக் காண வந்தேன்'' என்று சொன்னுர். சாது, தம்மைக் காண வந்த புதிய சந்நியாசியை மரியாதையுடன் வரவேற்று ஓர் ஆசனத்தில் அமரும்படி கேட்டுக்கொண்டார். அப்போது அவர்கள் இருந்த வழியாக ஒரு யானை போய்க்கொண்டிருந்தது. அதைப் பார்த்த சந்நியாசி சாதுவிடம், ''சுவாமி, தாங்கள் விரும்பினுல் இந்த யானையைக் கொல்ல முடியும் அல்லவா?'' என்று கேட்டார். அதற்குச் சாது, ''ஓ! அதை என்னுல் செய்ய முடியும்'' என்று பதில் சொல்லிவிட்டு, ஒரு துளி மண்ணைக் கையில் எடுத்தார். உடனே அந்த யானை கிறுகிறுத்துத் துடித்துக்கொண்டே கீழே விழுந்து இறந்துவிட்டது. இதைப் பார்த்துக்கொண்டிருந்த சந்நியாசி, ''ஆகா, தங்களுக்குத்தான் என்ன சக்தி! என்ன சக்தி! எவ்வளவு சுலபமாகத் தாங்கள் மந்திரசக்தியால் யானையைக் கொன்றுவிட்டீர்கள்!'' என்று சொல்லிப் பாராட்டினுர். அதைக் கேட்ட சாது பெருமை பொங்கப் புன்னகை பூத்தார். பிறகு சந்நியாசி மறுபடியும், ''சரி, இறந்து போன யானையை மீண்டும் தாங்கள் பிழைக்கச் செய்ய முடியுமா?'' என்று வினவினுர். அதற்குச் சாது உடனே, ''அதை

யும் என்னால் செய்ய முடியும்'' என்று பதில் சொன்னார். இவ்விதம் சொல்லிவிட்டு அவர் முன்போலவே சிறிது மண்ணைக் கையில் எடுத்து மந்திரித்தார். பிறகு அதை விழுந்து கிடந்த யானையின் மீது வீசினார். மறு கணமே யானை உயிர் பெற்று அசைந்து கொடுத்துக்கொண்டே எழுந்து நின்றது.

இதையெல்லாம் சந்நியாசியின் வடிவத்தில் வந்திருந்த பகவான் பார்த்துவிட்டு, ''சுவாமி, தங்களுடைய யோகசித்தி உண்மையிலேயே அபாரமானதுதான்! உங்களை நான் ஒரு கேள்வி மட்டும் கேட்க விரும்புகிறேன். இப்போது தாங்கள் யானையைக் கொன்றீர்கள். பிறகு மீண்டும் அதை உயிர் பிழைக்கச் செய்தீர்கள். என்றாலும் இதனால் தங்களுக்குக் கிடைத்த லாபம் என்ன? அதன் மூலம் தாங்கள் ஆன்மிகத்தில் எப்படிப்பட்ட முன்னேற்றம் அடைந்தீர்கள்? தாங்கள் பகவானை அடைவதற்கு இந்தச் செயல் தங்களுக்கு எந்த விதத்திலாவது உதவி செய்ததா?'' என்று கேட்டுவிட்டு அங்கிருந்து மறைந்து போனார்.

தர்மத்தின் போக்கு மிகவும் சூட்சுமமானது. இம்மியளவு உலக ஆசை ஒரு சாதகனிடம் இருந்தாலும், அவனால் பகவானை அடைய முடியாது. ஊசியின் காதில் நூலைக் கோக்க முயல்வதாக வைத்துக்கொள்வோம். அப்போது நூலில் ஓர் இழை பிரிந்திருந்தாலும், நூல் ஊசிக் காதின் வழியாக உள்ளே நுழையாது. இழைகளை முறுக்கி ஒருமுகப்படுத்தினால் ஊசியில் நூலைக் கோக்க முடியும். அது போலவே, மனம் ஒருமுகப்பட்டிருந்தால் பகவானை அடைவது சாத்தியமாகும்.

''நண்பனே, என்னை அடைய வேண்டும் என்ற விருப்பம் உனக்கு இருக்குமானால், உன்னிடம் அஷ்ட சித்திகளுள் ஏதேனும் ஒரே ஒரு சித்தி இருந்தாலுங்கூட உன்னுடைய அந்த விருப்பம் நிறைவேறாது'' என்று ஸ்ரீகிருஷ்ண பகவான் அர்ஜுனனிடம் கூறினார்.

சித்திகள் வாய்க்கப் பெற்றால் ஒருவனுக்கு அகங்காரம் உண்டாகிறது. அந்த அகங்காரம் காரணமாக அவன் பகவானை மறந்துபோகிறான்.

ஒரு சமயம் ஒரு பணக்காரர் இங்கே வந்திருந்தார். அவர் மாறுகண் பார்வையுடையவர். அவர் என்னிடம், ''நீங்கள் ஒரு பரமஹம்சர். அது மிகவும் நல்லது. நீங்கள் எனக்காக ஸ்வஸ்தியயனச்* சடங்கு ஒன்று செய்து வைக்க வேண்டும்'' என்று சொன்னார்.

(ஸ்வஸ்தியயனம் என்ற சடங்கின் மூலமாக அவர் தம்முடைய நன்மையைப் பெறும்போது அவர் பொருட்டு யோகசித்தியைப் பயன்படுத்தியாக வேண்டும். ஆனால் அப்படியெல்லாம் செய்வது ஒரு ஞானியின் செயல் ஆகாது.)

அந்த மனிதருக்குத்தான் எப்படிப்பட்ட அற்ப புத்தி! என்னை ஒரு பரமஹம்சன் என்று அவர் அழைத்தார்! ஆனால் அதே சமயம் கர்மகாண்ட சம்பந்தப்பட்ட ஒரு சடங்கை அவருக்காக நான் செய்துவைக்க வேண்டும் என்றும் விரும்பினார்.

அகங்காரம் இருந்தால் பகவானை அடைய முடியாது. அகங்காரம் எத்தகையது என்பது உங்களுக்குத் தெரியுமா? மழைநீர், மேடான நிலத்தில் தங்கி நிற்பதில்லை. அது கீழே வழிந்து பள்ளமான இடத்துக்கு ஓடி வந்துவிடுகிறது. பள்ளமான இடத்தில் அது தேங்கி நிற்கும். அத்தகைய இடத்தில் விதைகள் முளைத்து மரமாகின்றன. பிறகு மரங்கள் உரிய காலத்தில் பலன் தருகின்றன. அதேபோல, ஈசுவரகிருபையானது தற்பெருமையும் கர்வமும் உள்ளவர்களுடைய உள்ளத்தில் தங்கி நிற்பதில்லை. பணிவுள்ளவர்களின் உள்ளத்தில்தான் தங்கி நிற்கும். அவர்கள் பகவானுக்கு உரியவர் ஆகிறார்கள்.

ஆகவேதான் ஹாஸ்ராவிடம் நான் இவ்விதம் கூறினேன் — ''எனக்கு எல்லாம் தெரியும். மற்றவர்களெல்லோரும் முட்டாள்கள் என்று நீ ஒருபோதும் நினைக்காதே. எல்லோரிடமுமே அன்பு கொள்ள வேண்டும். எந்த மனிதனும் வேற்றான் ஆகமாட்டான். எல்லோருடைய உள்ளத்திலும் பகவான் குடிகொண்டிருக்கிறார். எல்லா ஜீவர்களிடமும் அவரே உறைகிறார்.

---

*நன்மை பெறுவதற்கும் தீமையை விலக்கிக் கொள்வதற்கும் இயற்றப்படும் கர்மகாண்டத்தைச் சேர்ந்த ஒரு வைதிகச் சடங்கிற்கு ஸ்வஸ்தியயனச் சடங்கு என்று பெயர்.

அவரைத் தவிர்த்து வேறு எதுவுமே இல்லை'' என்று சொன்னேன்.

பிரகலாதனைப் பார்த்துப் பகவான், ''என்னிடமிருந்து ஏதாவது வரம் கேட்டுப் பெற்றுக்கொள்'' என்று கூறினர். அதற்குப் பிரகலாதனே, ''பிரபோ, நான் தங்களைத் தரிசித்துவிட்டேன். எனக்கு அது போதும். வேறென்றும் எனக்கு வேண்டாம்'' என்று பதில் சொன்னன். ஆனல் பிரகலாதனுக்குக் காட்சி கொடுத்த பகவான் ஏதேனும் ஒரு வரத்தை யாவது தம்மிடமிருந்து பெற்றுக்கொள்ளும்படி மீண்டும் மீண்டும் அவனை வற்புறுத்தினர். அதற்கு இசைந்த பிரகலாதன், ''பகவானே, தாங்கள் எனக்கு ஒரு வரத்தை அவசியம் வழங்கித்தான் தீருவீர்கள் என்ருல் அது அப்படியே ஆகட்டும். இதோ இந்த வரத்தைத் தந்தருளுங்கள். யார் எல்லாம் என்னைத் துன்புறுத்தினர்களோ, அவர்கள் எல்லாரும் அந்த வினை காரணமாக எந்தவிதத் தண்டனைக்கும் ஆளாகாமல் இருக்கட்டும்!'' என்று வேண்டினன்.

இவ்விதம் பிரகலாதன் கேட்டதில் ஆழ்ந்த ஒரு கருத்து இருக்கிறது. பிரபஞ்சத்திலுள்ள எல்லா உயிர்களாகவும் மகாவிஷ்ணுதாம் வடிவெடுத் திருக்கிருர். அந்த மகாவிஷ்ணுதாம் ஓர் உருவத் தில் பிரகலாதனுக்குக் கஷ்டம் தந்தார். துன்புறுத்தியவர்களுக்குத் தண்டனை விதிக்கப் பட்டால் அந்தத் தண்டனையை உண்மையில் மகாவிஷ்ணுதாம் அனுபவித்தாக வேண்டும். அவ்விதம் மகாவிஷ்ணு தண்டனையை அனுப விப்பது பிரகலாதனுக்குச் சம்மதமாக இல்லை. ஆகவே யாருமே தண்டனைக்கு உட்படக்கூடாது என்று பிரகலாதன் வேண்டிக்கொண்டான். △

## மனச்சாட்சி



ஜின்னூன் என்ற பெரியார் ஒருவர் ஒரு மலைக்குச் சென்ருர். ஒரு புதரின் வாயிலில் ஒரு மனிதன் உட்கார்ந்துகொண்டிருந்தான். அவனுடைய ஒரு கால் புதரினுள் நீட்டப்பட்டிருந்தது. மற்றெரு கால் துண்டிக்கப்பட்டுப் பாதையில் கிடந்தது. அதில் ஈக்களும் எறும்புகளும் மொய்த்துக்கொண்டிருந்தன.

ஜின்னூன் அவனிடம் சென்ருர். அவனுடைய கால் துண்டிக்கப்பட்டிருப்பதன் காரணத்தை வினவினர்.

அதற்கு அந்த மனிதன், ''ஐயா! நான் இந்த விடுதியின் உள்ளே ஒரு நாள் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்போது தெருவில் ஒரு பெண் சென்றுகொண்டிருந்தாள். அவளுடைய அழகிய உருவம் என் மனதைக் கவர்ந்தது; அவளை நன்ருகப் பார்க்க வேண்டும் என்று, என் மனதில் என்றைக்கும் ஏற்படாத ஆவல் ஏற்பட்டது. உடனே அந்த இடத்தை விட்டு எழுந்தேன். அவளைக் காண்பதற்காக ஒரு காலை எடுத்து வெளியில் வைத்தேன். நல்ல காலத்திற்கு அடையாள மாக உடனே என் மனதில் வேருேர் எண்ணம் தோன்றிற்று.

''ஏ போலித் துறவியே! உனக்கு வெட்கமாக இல்லையா? முப்பதாவது வயதிலிருந்து தனிமையில் தவம் செய்து வந்த நீ இப்போது காமப் பேயின் வலையில் சிக்கிக்கொள்ள இருக்கிருயே!'' என்று என் மனமே என்னை எளனம் செய்யத் தொடங்கியது.

''உடனே என் உடல் நடுங்கலாயிற்று. அந்த மங்கையைக் கண்டு மகிழ்வதற்கு உதவிய காலைத் துண்டித்தேன். பின்பு அதைப் பாதையில் வீசி எறிந்தேன். இதுவும் இறைவனின் லீலை என எண்ணி வியந்துகொண்டிருக்கின்றேன். அவர் என்னைத் தடுத்தாட்கொண்ட கருணையை எண்ணி வியப்படைகிறேன்'' என்று கூறினன்.

பிற்காலத்தில் அவன் பெரிய சாதுவானன்.

– பக்திக் கதைகள்




## காசியில் ஸ்ரீராமகிருஷ்ணர்

ஒரு நாள் மதுரநாதர் ஸ்ரீராமகிருஷ்ணருடன் காசியில் வாழ்ந்த ஜமீன்தார் ஒருவரைக் காணச் சென்றார். ஜமீன்தாரின் வீட்டில் லௌகிகர்களாகிய மக்கள் பலர் இருப்பதை, குருதேவர் கவனித்தார். அவர்கள் பணம் வீடு நிலம் தானியம் கொடுக்கல் வாங்கல் லாப நஷ்டம் வியாபாரம் என்று கடவுளைப்பற்றித் தவிர மற்ற எல்லா விதமான லௌகிகப் பேச்சுக்களிலும் ஈடுபட்டிருந்ததை ஸ்ரீராமகிருஷ்ணர் கேட்க நேர்ந்தது! இறைவனைத் தவிர வேறு எதையும் சிந்தித்தறியாத அவருக்கு, அங்கு நடந்து கொண்டிருந்த லௌகிகப் பேச்சுக்கள் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போல் இருந்தன. அவர்களின் பேச்சைக் கேட்க நேர்ந்ததனால் வெகுவாக மனம் வருந்திய அவர் ஜகன்மாதாவிடம், ''அம்மா, என்னை நீ எங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறாய்? நான் தட்சிணேசுவரத்திலே இதைவிட எவ்வளவோ நன்றாக இருந்தேனே! அங்கோ ஆன்மிக விஷயம் தவிர வேறு எதுவுமே என் காதில் விழாது. ஆனால் இங்கோ மக்கள் எல்லா விதமான லௌகிகப் பேச்சுக்களிலும் உழல்பவர்களாக இருக்கிறார்களே!'' என்று கூறிப் பிரார்த்தித்துக்கொண்டார்.

மதுரநாதர் காசிக்குச் சென்றதும் முதல் காரியமாக ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியபடியே அங்குள்ள பண்டிதர்களுக்கெல்லாம் பெரிய விருந்து வைத்தார்; பண்டிதர்களையும் அவர்களின் குடும்பங்களைச் சேர்ந்தவர்களையும் தமது இருப்பிடத்திற்கு வரவழைத்து அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு துணியும் ஒரு ரூபாயும் வழங்கினார். இவ்விதம் மதுரநாதர் கேட்பதை எல்லாம் தரும் கற்பக மரம் போன்று தம்மிடம் யார் எதைக் கேட்டாலும் கொடுத்தார். அந்தத் தருணத்தில் அவர் தம்மிடமிருந்து எதையேனும் பெற்றுக்கொள்ளும்படி ஸ்ரீராமகிருஷ்ணரையும் வேண்டிக் கேட்டுக்கொண்டார். ஆனால் துறவு மனப்பான்மை ஒன்றையே தமது அணிகலனாகக் கொண்டு வாழ்நாள் முழுவதும் வாழ்ந்த பரமஹம்சதேவரால் மதுர பாபுவிடமிருந்து எதையும் பெற்றுக்கொள்ள இயலவில்லை. இறுதியில் அவர், எதையேனும் பெற்றுக்கொள்ளாமல் மதுரநாதரின் கோரிக்கையை அறவே மறுத்து அவரைப் புண்படுத்த விரும்பாமல், ''தண்ணீர் வைத்துக்கொள்வதற்கு ஒரு கமண்டலம் வாங்கிக் கொடு'' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணரின் பற்றற்ற மனப்பான்மையைக் கண்டு மதுரபாபுவின் கண்களில் நீர் திரையிட்டது.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒவ்வொரு நாளும் ஹ்ருதயராமின் துணையுடன் காசி விச்வநாதர் கோவிலுக்குச் சென்று விச்வநாதரைத் தரிசித்துத் திரும்பினார். அவ்விதம் விச்வநாதரின் தரிசனத்திற்குச் செல்லும் வழியில் அடிக்கடி அவர் சமாதிநிலை அடைந்துவிடுவார். கோவிலில் விச்வநாதரைத் தரிசிக்கும்போதும் அவருக்குச் சமாதிநிலை வந்துவிடும். உடன் சென்ற ஹ்ருதயராம் பரவசநிலையில் ஆழ்ந்துவிடும் பரமஹம்சரைத் தாங்கியபடியே கோவிலுக்கு அழைத்துச் சென்று விச்வநாதரைத் தரிசிக்கச் செய்து திரும்பவும் அழைத்து வருவார்.

காசியில் கேதார கட்டத்தில் கேதார்நாத்

(கேதாரேச்வரர்) கோவில் தலையாய முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் தங்கியிருந்த இடத்திலிருந்து மிகவும் அருகிலேயே அந்தக் கோவில் அமைந்திருக்கிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் ஒவ்வொரு நாளும் அங்கே சென்று கேதாரநாதரின் தெய்விகச் சாந்நித்தியத்தைப் பெருமளவில் உணர்ந்தார். கேதார்நாத் கோவிலில் அவர் பெற்ற சமாதிநிலை, காசியில் அவர் தங்கியிருந்த காலத்தில் பெற்ற சமாதி நிலைகளிலேயே மிகவும் ஆழ்ந்ததாக இருந்தது. இதே கோவிலுக்கு ஸ்ரீசாரதாதேவியாரும் விவேகானந்தரும் பிற்காலத்தில் விஜயம் செய்திருக்கிறார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

காசியில் அப்போது பிரபலமாக விளங்கிய சாதுக்களையும் ஸ்ரீராமகிருஷ்ணர் சென்று பார்த்தார், 'நானக் பந்தி' என்ற பிரிவைச் சேர்ந்த சந்நியாசிகள் வாழும் மடத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் மதுரநாத்துடன் சென்றிருந்தார்; அந்தத் துறவிகளின் தெய்வபக்தியைக் கண்டு ஸ்ரீராமகிருஷ்ணர் எல்லையற்ற மகிழ்ச்சி எய்தினர்.

### திரைலிங்க சுவாமிகள்

மற்றொரு நாள் அப்போது மௌன விரதம் மேற்கொண்டிருந்த புகழ் பெற்ற திரைலிங்க சுவாமியையும் ஸ்ரீராமகிருஷ்ணர் போய்ப் பார்த்தார். திரைலிங்க சுவாமி அவரை ஆசனத்தில் அமரும்படி கைசாடை காட்டி அன்புடன் வரவேற்றார். பிறகு தமது அன்பின் அறிகுறியாக அவர் தம்மிடமிருந்த மூக்குப்பொடி டப்பியை ஸ்ரீராமகிருஷ்ணரிடம் நீட்டினர்.

அப்போது திரைலிங்க சுவாமியைத் தாம் சந்தித்ததைப்பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:—

''காசி விசுவநாதர் திரைலிங்க சுவாமியிடம் உயிர் கொண்டு ஒளிர்வதைப் பார்த்தேன். அவர் அங்கு இருந்ததனால் அவரது சாந்நித்தியம் காரணமாகக் காசி முழுவதும் தெய்விகக் களையுடன் விளங்கியது. உடலுணர்ச்சியைக் கடந்து அவர் மிகவும் உயர்ந்த ஆன்மிக நிலையில் இருந்தார். அவர் கொளுத்தும் வெயிலைப் பொருட்படுத்தாமல் சுடும் தரைமீது மகிழ்ச்சியுடன் சர்வசாதாரணமாகப் படுத்திருந்தார். நான் அவரிடம், 'கடவுள் ஒருவரா, பலரா?' என்று கைசாடையின் மூலம் வினவினேன். அவரும் அதற்குச் சைகையின் மூலம், 'சமாதி நிலையில் காணும்போது கடவுள் ஒருவரே' என்றும், 'விவகார நிலை என்ற கண்ணாடி வழியாகப் பார்க்கும்போது கடவுளர் பலர்' என்றும் பதில் கூறினர். நான் திரைலிங்க சுவாமியை இருதய்க்குச் சுட்டிக் காட்டி, 'இவருடைய நிலை உண்மையான ஒரு பரமஹம்சரின் நிலையாகும்' என்று கூறினேன்.''



அப்போது, மணிகர்ணிகையின் அருகில் ஒரு நீராடும் துறையைத் திரைலிங்க சுவாமி கட்டுவித்துக்கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியதற்கிணங்க இருதய், திரைலிங்க சுவாமி செய்து வந்த தொண்டிற்காக மண் வெட்டியால் சில தடவை மண்ணை எடுத்தெறிந்து சிறிது நிலத்தைப் பண்படுத்தினர். இது திரைலிங்க சுவாமிக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தந்தது.

ஒரு நாள் குருதேவர் திரைலிங்க சுவாமியை மதுரபாபு தங்கியிருந்த மாளிகைக்கு அழைத்து, உணவு முதலியன தந்து மிகவும் மரியாதையுடன் உபசரித்தார். அப்பொழுது தமது கையாலேயே திரைலிங்க சுவாமிக்குக் குருதேவர் பாயசம் வழங்கி அருந்தச் செய்தார்.

திரைலிங்க சுவாமியைப்பற்றிப் பிற்காலத்திலும் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது சீடர்களிடம் பலவேறு சமயங்களில் குறிப்பிட்டிருக்கிறார்.

ஏறக்குறைய ஒரு வாரம் காசியில் தங்கியபின் மதுரபாபு தமது யாத்திரைக் கோஷ்டியுடன் பிரயாகைக்குச் (அலகாபாத்) சென்றார். அங்கே தீர்த்தங்களிலேயே அரசன் (தீர்த்த ராஜா) என்று பிரசித்தி பெற்ற திரிவேணி சங்கமத்தில் அனைவரும் நீராடினர். மதுர

பாபுவும் மற்றவர்களும் அந்த க்ஷேத்திரத்தின் வழக்கத்தையொட்டித் தலைமழித்துக் கொண்டனர். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர், தாம் அது செய்ய வேண்டிய அவசியமில்லை என்று கூறி, அவ்விதம் செய்துகொள்ளவில்லை. பிரயாகையில் மூன்று நாட்கள் தங்கியபிறகு, அந்த யாத்திரைக் கோஷ்டியினர் காசிக்குத் திரும்பினர்.

அடுத்த இரண்டு வார காலம் அவர்கள் காசியில் தங்கியிருந்தனர். அப்போது, தமக்குக் குருவாக விளங்கி, தாந்திரிகச் சாதனங்களைக் கற்பித்த பைரவி பிராம்மணியை ஸ்ரீராமகிருஷ்ணர் சந்தித்தார். அந்த அம்மையார் கங்கைக் கரையில் அமைந்த தீர்த்தகட்டங்களில் ஒன்றில், 'அறுபத்துநான்கு யோகினிகள்' என்று வழங்கப்பட்ட இடத்தில், மோக்ஷதா என்ற பெயருடைய பக்தி நிரம்பிய மூதாட்டி ஒருவரின் துணையுடன் வசித்து வந்தார். மகா பக்திமதியான அந்த மூதாட்டியின் தெய்வ பக்தியைக் கண்டு குருதேவர் பெரிதும் மகிழ்ச்சியுற்றார். அங்கே பைரவி பிராம்மணியைப் பார்ப்பதற்குக் குருதேவர் பல முறை சென்றார். பின்னர் மதுரபாபுவின் கோஷ்டியினர் காசியிலிருந்து பிருந்தாவனம் சென்றபோது, குருதேவர் பிராம்மணியையும் தம்முடன் பிருந்தாவனத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கே குருதேவர் பிராம்மணியிடம், ஆயுள் முடியும்வரை அவரைப் பிருந்தாவனத்திலேயே இருக்கும்படி கேட்டுக்கொண்டார்.

[அவ்விதமே செய்த பிராம்மணி யாத்திரை முடிந்து ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரம் திரும்பிய சிறிது காலத்திற்குள் உலக வாழ்வை நீத்தார். இந்தக் கட்டுரை ஏற்கனவே நீண்டு விட்டதனால் பிருந்தாவனத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் இதில் இடம் பெறவில்லை.]

குருதேவருக்குப் பிருந்தாவனத்தில் வீணை வாசிப்பதைக் கேட்க வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. ஆனால் அவரது ஆவலை நிறைவேற்றுவதற்குத் தகுதி வாய்ந்த வீணை வித்துவான் எவரும் அங்கே கிடைக்கவில்லை. எனவே குருதேவரின் விருப்பம் பிருந்தாவனத்தில் நிறைவேறுவதற்கு வழியில்லாமல் போயிற்று.

பிருந்தாவனத்தில் இரண்டு வார காலம் தங்கி விட்டு மதுரபாபு கோஷ்டியினர் மீண்டும் காசிக்குத் திரும்பி வந்தனர்.

காசிக்குத் திரும்பியதும் வீணை வாசிப்பதைக் கேட்க வேண்டும் என்ற ஆவல் மீண்டும் குருதேவருக்குத் தோன்றியது.

காசியில் அப்போது மகேசசந்திரர் என்பவர் புகழ்பெற்ற வீணை வித்வானாக மதிக்கப்பட்டார். அவர் காசியிலுள்ள மதன்புரா என்ற இடத்தில் வாழ்ந்து வந்தார். பணக்காரரான அவர் தாமாக மதுரபாபுவின் வீட்டிற்குச் சென்று வீணை வாசிக்கக் கூடியவர் அல்லர். எனவே மகேசசந்திரர் வீணை வாசிப்பதைக் கேட்பதற்காக அவரது வீட்டிற்குக் குருதேவர் ஹ்ருதயுடன் தாமே சென்றார். ஸ்ரீராமகிருஷ்ணரின் வேண்டுகோளுக்கு இணங்க அவருக்காக மகேசசந்திரர் அன்றையதினம் நீண்ட நேரம் வீணை வாசித்தார். மகேசசந்திரர் வீணை வாசிக்கத் துவங்கி அந்த இனிய இசை காதில் விழுந்ததுமே ஸ்ரீராமகிருஷ்ணர் சமாதிநிலை அடைந்தார். அந்தச் சமாதிநிலையிலிருந்து அரைகுறையாக அவருக்கு உலக நினைவு திரும்பியபோது அவர் ஜகன்மாதாவிடம், "அம்மா, வீணை வாசிப்பதைக் கேட்டு மகிழ்வதற்கு இடையூறாக என்னை உணர்வு இழக்கச் செய்யாதே. நான் வீணை வாசிப்பதைக் கேட்க விரும்புகிறேன்" என்று பிரார்த்தித்தார். இவ்விதம் பிரார்த்தித்ததும் அவரது மனம் சாதாரண உலக நினைவில் இருந்தது. பின்னர் வீணை வாசிப்பதைக் கேட்டபடியே அந்த இசைக்கு இயைய இடையிடையே தாமும் தமது மெல்லிய குரலில் சேர்ந்து பாடினார்.

இது போன்று மாலை 5-மணி முதல் 8-மணி வரை மூன்று மணி நேரம் மகேசசந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணருக்காக வீணைக் கச்சேரி செய்தார். அதன் பின்னர் மகேசசந்திரர் அன்புடன் வழங்கிய சிற்றுண்டியை அருந்திய பின்பு ஸ்ரீராமகிருஷ்ணர் ஹ்ருதயுடன் கேதார கட்டத்தில் இருந்த தமது இருப்பிடத்திற்குத் திரும்பினார். அன்று முதற்கொண்டு குருதேவர்

காசியில் இருந்தவரை, மகேசசந்திரர் ஒவ்வொரு நாளும் குருதேவரின் இருப்பிடத்திற்குச் சென்று அவரைத் தரிசித்துச் செல்வதை வழக்கமாகக் கொண்டார். ''அவர் வீணை வாசிக்கும்போது தம்மை முற்றும் மறந்து அதிலேயே ஆழ்ந்திருந்தார்'' என்று மகேசசந்திரரைப்பற்றிக் குருதேவர் குறிப்பிட்டிருக்கிறார்.

காசியில் விசுவநாதருக்கு விசேஷமாக ஆடையணிகள் அணிவிக்கப்பெறும் ஒரு திருக்கோலத்தைத் தரிசிப்பதற்காக மதுர பாபு குழுவினர் மே மாதம் வரையிலும் அங்கேயே தங்கினர். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் தங்க அன்னபூரணியைத் தரிசித்தார்.

காசியிலிருந்து கல்கத்தா திரும்பும் வழியில் மதுர பாபு கயை க்ஷேத்திரத்திற்குச் செல்ல விரும்பினார். ஆனால், தாம் பிறப்பதற்கு முன்பு குதிராம் கயையில் பெற்ற ஆன்மிக அனுபவத்தையும், கயை சென்றால் தமது உயிர் உடலில் நிற்காது என்பதையும், அம்பிகையின் சங்கல்பம் தாம் இன்னும் சில காலம் உலகில் வாழ வேண்டும் என்பதையும் ஸ்ரீராமகிருஷ்ணர் தெளிவாக உணர்ந்திருந்ததனால், மதுர பாபுவுடன் கயைக்குச் செல்ல அவர் சம்மதிக்கவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் விரும்பாத நிலையில் மதுர பாபு கயைக்குச் செல்லும் நினைப்பைக் கைவிட்டு, ஏறத்தாழ நான்கு மாதகால யாத்திரைக்குப் பிறகு கல்கத்தா திரும்பினார்.

கேதார கட்டத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் தங்கிய வீடு இப்போதும் இருக்கிறது. பல அறைகளைக் கொண்ட அந்தப் பெரிய வீட்டில் இப்போது பல குடும்பங்கள் வசித்து வருகின்றன. 'ஸ்ரீராமகிருஷ்ண பாதுகா' எனப்படும் அந்த இடத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் தங்கியிருந்த மாடியிலுள்ள அறையை வாழும் இடமாகப் பயன்படுத்தாமல் பூஜை அறையாக வைத்திருக்கிறார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரின் பாதக்குறடுகள் அங்கு இருக்கின்றன. சிறு அளவில் பூஜையும் நாள்தோறும் அங்கு நடைபெற்று வருகிறது. ❖

---



# வைஷ்ணவ ஜனதோ

காந்திஜி தமது உயிரைவிட மேலானதாகக் கருதிய 'வைஷ்ணவ ஜனதோ' பாடலை இயற்றியவர் கவி நரசிம்ம மேத்தா. அவர் இன்னும் பல அருமையான பக்திகீதங்களை இயற்றியுள்ளார்.

நரசிம்ம மேத்தா சிறந்த கவியாக விளங்கியதுடன், பரம பக்தராகவும் இருந்தார். 'வைஷ்ணவ ஜனதோ'வில் உண்மையான வைணவனின்—அதாவது மெய்யடியானின்—சிறப்பியல்புகளை எல்லாம் தொகுத்துக் கூறுகிறார், நரசிம்ம மேத்தா. 'வைஷ்ணவ ஜனதோ' பாடலின் பொருள்:—

எவன் ஒருவன் பிறர் துயரங்களை உணர்வானோ, பிறர் கஷ்டங்களைக் களைந்து உதவுவானோ, அகந்தைக்கு இடமே கொடுக்கமாட்டானோ, அவனே உண்மையான வைஷ்ணவன்.

எவன் உலகத்தின் உயிரினம் அனைத்தையும் வணங்குகிறவனோ, எவன் பிறரை நிந்திக்கவே மாட்டானோ, எவன் மனம் வாக்கு காயம் ஆகியவற்றைச் சலனமின்றி வைத்துக் கொள்பவனோ, அவனைப் பெற்ற அன்னை மிகவும் கொடுத்து வைத்தவள்.

எவன் சமநோக்கு உடையவனோ, வேட்கையை விட்டொழித்தவனோ, பிற மாதர்களைத் தாயாக வணங்குபவனோ, எவன் பொய்யே பேசமாட்டானோ, எவன் பிறர் பொருளைக் கையால் தீண்டவும் மாட்டானோ அவனே உண்மையான பக்தன்.

எவனை மோகமும் மாயையும் அணுகாவோ, எவனது மனதிலே திட வைராக்கியம் குடிகொண்டிருக்குமோ, எவன் வாய் ராமநாமத்தையே ஓயாது ஓதிக்கொண்டிருக்குமோ, அவனுடைய உடல் எல்லாப் புனிதத் தீர்த்தங்களுக்கும் உறைவிடமாகும்.

எவன் பேராசையும் கபடமும் இல்லாதவனோ, எவன் காமத்தையும் போகத்தையும் விட்டொழித்தவனோ அவனே உண்மையான பக்தன்.

அவனைத் தரிசிப்பவர்கள் தலைமுறை தலைமுறைக்கும் கடைத்தேறியவர் ஆவர்.

# சுவாமி பிரம்மானந்தர்

குருதேவரின் மறைவுக்குப் பிறகு சுவாமி பிரம்மானந்தர் (மகராஜ்) கடுந்தவம் புரியும் பொருட்டுப் 'பரிவ்ராஜக' வாழ்வை மேற்கொண்டார். சீடர்களுடன் ஊரூராகச் சென்று, பிக்ஷையேற்று உண்டு, அமைதியான இடங்களில் தங்கித் தியானம் புரியலானர்.

ஒரு சமயம் பிருந்தாவனத்திற்கு சுவாமி துரியானந்தருடன் மகராஜ் சென்ருர். அங்கே இருவரும் தியானத்தில் அமர்ந்தனர். அப்போது துரியானந்தர், ''நான் இன்று பிக்ஷக்குப் போகப்போவதில்லே. இந்தப் பிருந்தாவனத்தின் புனித அன்னேயான ராதை இன்று நமக்கு உணவு கிடைக்கச் செய்கிருளா என்று பார்ப்போம்'' என்று கூறிவிட்டுத் தியானத்தில் அமர்ந்தார்.

மறுநாள் காலே வரை இருவரும் பசி தாகம் ஏதுமின்றித் தம்மை மறந்த ஆனந்த பரவச நிலேயில் இருந்தார்கள். பிறகு தியானம் கலேந்து எழுந்தபோது, பக்தர் ஒருவர் அவர்களுக்கு உணவு எடுத்துக்கொண்டு வருவதைக் கண்டனர். பசிமிகுதியால் அந்த உணவை இருவரும் சுவைத்து உண்டனர்.

பிறகு இருவரும் பிருந்தாவனத்தை விட்டு அருகிலுள்ள 'குசும்' ஏரிகரைக்குச் சென்றனர். அங்கே சாதுக்கள் பலர் பல குடிசைகளில் தங்கித் தியானத்தில் ஈடுபட்டிருந்தனர். சுவாமி பிரம்மானந்தரும், சுவாமி துரியானந்தரும் அங்கே சில மாதங்கள் தங்கி ஞானசாதனேயைப் பழகினர்.

அந்தச் சமயத்தில் ஒரு நாள் சுவாமி பிரம்மானந்தருக்கு விநோத அனுபவம் உண்டாயிற்று. அவர் தியானம் செய்து கொண்டிருந்தபோது, சிறு சிறு கூழாங்கற்கள் அவர்மீது வந்து விழுந்தன. அவர் தியானம் கலேந்து கண்விழித்துப் பார்த்தபோது எதிரே, இறந்துபோன ஒருவனின் ஆவி நிற்பது தெரிந்தது. அதைப் பார்த்து மகராஜ், ''நீதானே எனக்குத் தொல்லே கொடுத்தாய்?'' என்று வினவினர்.

அதற்கு அந்த ஆவி, ''ஆமாம் சுவாமி, உங்கள் கவனத்தைக் கவருவதற்காகவே, நான் அவ்வாறு செய்தேன். துயரம் நிறைந்த எனது இந்த அவல வாழ்க்கையிலிருந்து நீங்கள்தாம் காப்பாற்ற வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டது.

அதற்கு மகராஜ், ''உன்னே விடுவிப்பதற்கு எனக்கு வழியொன்றும் தெரியாதே!'' என்று பதில் கூறினர். ஆனல் அந்த ஆவியோ, ''தாங்கள் மிகவும் புனிதமானவர். தாங்கள் எனக்காகப் பிரார்த்தனே செய்தால், எனக்கு விடுதலே கிடைத்துவிடும்'' என்று வேண்டிக் கொண்டது. மகராஜூம் அவ்வாறே செய்தார்.

ஒவ்வொரு நாளும் மகராஜ் நள்ளிரவில் விழித்துக் கொண்டு ஏரிகரையில் தியானம் செய்வது வழக்கம். ஒரு நாள் அவர் அயர்ந்து உறங்கிவிட்டார். அப்போது அவரை யாரோ தட்டி எழுப்புவது தெரிந்தது. துரியானந்தர் தாம் எழுப்புவதாக மகராஜ் எண்ணினர். ஆனல் அது ஓர் ஆவி உருவம். வைணவத் துறவியைப் போல் உடையணிந்து அந்த உருவம் மிகவும் பிரகாசமாக இருந்தது. ஜபமாலேயை உருட்டியபடி மகராஜுக்குப் பின்னல் நின்று ஜபம் செய்யத் தொடங்கியது. இதன் பிறகு ஒவ்வோர் இரவும் இதுபோலவே நடந்தது. பிற்காலத்தில் மகராஜ் இந்த அனுபவத்தைப்பற்றித் தமது சீடர்களிடம், ''ஆன்மிக உணர்வுள்ள பலர், பூத உடலே உகுத்துவிட்டு நுண்ணிய ஆவி உருவத்தில் வாழ்கிருர்கள். ஆன்மிகத்தில் நாட்டம் உள்ள வர்களுக்கு அவர்கள் பல வழிகளில் உதவுகிருர்கள்'' என்று கூறியுள்ளார்.

சுவாமி பிரம்மானந்தர் ஆவிகளே மட்டும் காணவில்லே; தெய்வத்தையும் நேரில் தரிசித்தார். அவருக்கு ஏற்பட்ட தெய்விகக் காட்சியில் ஒன்று அவர் துர்க்கையைத் தரிசித்தது. ஆண்டு

தோறும் நடைபெறும் துர்க்கா பூஜைக்குச் சில தினங்களுக்கு முன்பு மகராஜ் பேலூர் மடத்தில் கங்கைக் கரையில் அமர்ந்திருந்தார். அப்போது கங்கையின்மீது அன்னை துர்க்காதேவி நடந்து மடத்துப் பக்கமாகச் செல்வதைக் கண்டார். மடத்தின் தோட்டத்தில் இருக்கும் வில்வ மரத்தின் அருகே வந்த சமயம் தேவியின் காட்சி மறைந்துவிட்டது.

சிறிது நேரத்தில் அங்கு வந்த சுவாமி விவேகானந்தர் மகராஜிடம், ''ராஜா! மடத்தில் துர்க்கை பூஜைக்கு ஏற்பாடு செய்யுங்கள். மடத்தில் துர்க்கைபூஜை நடப்பதான தெய்விகக் காட்சியை நான் கண்டேன்'' என்றார்.

மகராஜும் தாம் கண்ட துர்க்கையின் காட்சியைக் கூறினர். அதுமுதலே மடத்தில் துர்க்கை பூஜை விசேஷமாக நடைபெற்று வருகிறது.

மனதை வென்ற துறவிகளின் எதிரில் மிருகம் கூடத் தன் பகைமையை மறந்து வாழும்; அவர்களைக் கண்டதும் கொடிய விலங்கானாலும் தன் இயல்பை மறந்து அவர்களுக்கு அடங்கிவிடும் என்று கூறுவார்கள். அதே போன்று சுவாமி பிரம்மானந்தரின் வாழ்விலும் ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

ஒரு சமயம் மகராஜும் சுவாமி அகண்டானந்தரும் புவனேச்வரம் காட்டிற்குச் சென்றனர். அவர்கள் திரும்பி வந்தபோது மாலைநேரம். இருள் சூழ்ந்திருந்தது. அவர்கள் வந்து கொண்டிருந்த பாதையில் எதிரே சிறுத்தைப் புலி ஒன்று அவர்களை நோக்கி வந்தது. அதை அவர்கள் கண்டனர். மகராஜ் சிறிதும் அச்சமின்றி அசையாமல் நின்றார். சிறுத்தையும் சில அடி தொலைவில் எதிரே நின்றது. சிறிது நேரம் மகராஜை அது உற்றுக் கவனித்துவிட்டு, பிறகு வந்த வழியே சென்றுவிட்டது. ஆன்மபலத்தின் முன் சிறுத்தையின் பலம் என்ன செய்ய முடியும்? தோற்று ஓடிவிட்டது.

ஒரு முறை சுவாமி ராமகிருஷ்ணானந்தர் தம் சீடர்களுக்கு, சுவாமி பிரம்மானந்தரை அறிமுகப் படுத்தி, ''உங்களில் யாரும் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரை நேரில் பார்த்ததில்லை. இப்போது நீங்கள் சுவாமி பிரம்மானந்தரைப் பார்ப்பது ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்ப்பதற்குச் சமமாகும்'' என்றார்.

இதை உறுதிப்படுத்துவது போல் மற்றொரு முறை, பக்தர் ஒருவர் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு நிவேதனம் செய்யப் பழங்கள் கொண்டு வந்தார். அப்போது சுவாமி ராமகிருஷ்ணானந்தர் பக்தரிடம், ''நீங்கள் பழங்களை மகராஜிடம் சமர்ப்பியுங்கள். அது ஸ்ரீராமகிருஷ்ணருக்கு நிவேதனம் செய்வதற்கு நிகராகும்'' என்று கூறினர்.



சுவாமி பிரம்மானந்தரின் ஞானமுதிர்ச்சி காரணமாகத் தெய்விக உணர்வு அவரிடம் வெள்ளமெனப் பெருக்கெடுத்தது. அவர் உலகச் சார்புகள் அனைத்தையும் கடந்தவரானர்; தம்மை மறந்தார்; இறைவனின் சாந்நித்தியத்தை எப்போதும் உணர்ந்தார். சென்ற இடமெல்லாம் அவருக்கு இறைவனின் சின்மய தரிசனம் கிடைத்துக்கொண்டே இருந்தது.

மகராஜ் தென்னிந்தியாவில் பயணம் செய்த போது மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் அவருக்கு அன்னை மீனாட்சியின் தரிசனம் கிட்டியது. அன்னையைக் கண்டதும், ''தாயே! தாயே!'' எனக் கூவினர். புற உலகை மறந்தார். சமாதிநிலையை எய்தினர். அப்போது அருகில் இருந்த சுவாமி ராமகிருஷ்ணானந்தர் அவரைக் கீழே விழாமல் தாங்கிப் பிடித்துக்கொண்டார். சில மணிநேரம் சென்ற பின்பே உணர்வு திரும்பினர்.

இதே போன்று ராமேச்வரம் கோயிலிலும் சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்தார்.

அங்கேயும் அவர் சமாதி நிலையை அடைந்தார். கன்னியாகுமரிக்குச் சென்றபோதும் மகராஜுக்கு இத்தகைய அனுபவமே ஏற்பட்டது. அன்னை அவருக்குக் கன்னிப்பெண் உருவில் குமரி அன்னையாகக் காட்சி தந்தாள். மகராஜ் பல தினங்கள் அங்கே தங்கி அன்னையைத் தரிசித்தார். கோயிலுக்குள் நுழையும்போதெல்லாம் அவர் புற உலக நினைவை இழந்து அன்னையின் எதிரில் மௌனமாக நெடுநேரம் நிற்பார்.

இவ்வாறு அவர் எப்போதும் இறையுணர் விலும் சின்மய ரூபத்தைக் கண்டும் ஆனந்த பரவசநிலையை அடைவார்.

சுவாமி பிரம்மானந்தரிடம் ஏற்பட்டிருந்த ஞான அனுபூதி காரணமாக அவரிடம் பலவித ஆற்றல்கள் காணப்பட்டன. எந்த ஒரு பொருளைப் பற்றியும் அவர் சிந்தனை செய்யும்போதே அதன் உண்மை இயல்பு முற்றிலும் அவருக்கு விளங்கிவிடும். அதனால் அவர் தம்மை நாடி வரும் சாதகர்களின் இயல்பையும், அவர்களது இஷ்டதெய்வம் எது என்பதையும், அவர்களின் ஆன்மிக வளர்ச்சியையும் உணர்ந்துகொண்டு, அவர்களுக்குத் தக்கவாறு தீட்சை அளிப்பார்.

மெய்ப்பொருளை நாடும் சாதகர் எவரேனும் ஆன்மசாதனையில் இடர்ப்பட்டால் அவர்களுக்குத் துணையாய் இருந்து உதவுவார். நேரில் வராதவர் களாக இருந்தாலும் தமது யோகக்காட்சியில் அவர்களைக் கண்டு, அவர்களது கனவில் சென்று அவர்களுக்குத் தீட்சையளிப்பார். அவ்வாறு கனவில் அவரிடம் தீட்சை பெற்றவர்கள் பலர் உண்டு.

ஒருமுறை பக்தியுணர்வு கொண்ட இளம்பெண் ஒருத்தி, கனவு கண்டு அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக மகராஜிடம் வந்தாள். அப் போது மகராஜ் மற்றச் சகோதரச் சீடர்களுக் கிடையே அமர்ந்திருந்தார். வந்த அந்தப் பெண் முதற் பார்வையிலேயே அவரை அடை யாளம் கண்டுகொண்டாள். அவரிடம் சென்று, தனக்குக் கனவில் ஏற்பட்ட அனுபவத்தைக் கூறத் தொடங்கினாள். கனவில் தீட்சை பெற்ற மந்திரத்தை அந்தப் பெண் சொல்லத் தொடங்கிய போது, சுவாமி பிரம்மானந்தர் அதைத் தடுத்து, அந்த மந்திரம் என்ன என்பதை அவரே கூறினார். அதன்பின் அந்தப் பெண் தன் கனவுக் காட்சியின் உண்மையை உணர்ந்து மகிழ்ந்தாள்.

வாலிபர் ஒருவரும் இவ்வாறு கனவில் மந்திர தீட்சை பெற்றார். ஆனால் கண் விழித்ததும் அந்த மந்திரம் மறந்து போய்விட்டது. பிறகு சிறிது காலத்திற்குப் பின் மகராஜிடம் அதே மந்திரத் தைத் தீட்சையாகப் பெற்றபோது, அவருக்குத் தாம் கண்ட கனவுக் காட்சி ஞாபகம் வந்தது. அவர் இதை எண்ணி வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருமுறை பிரபுக்க ளின் குடும்பத்தைச் சேர்ந்த இரண்டு பெண்களின் கனவில் தோன்றி, சுவாமி பிரம்மானந்தரிடம் செல்லுமாறு கூறினார். அந்தப் பெண்களோ பிரம்மானந்தரைப் பற்றிக் கேள்விப்பட்டதோ படித்ததோகூட இல்லை. ஆயினும் அவர்கள் சுவாமி பிரம்மானந்தரை நாடி வந்தனர். அவர் அந்தப் பெண்மணிகளுக்கு மந்திர தீட்சை அளித்தார்.

சுவாமி பிரம்மானந்தரை மடத்து சுவாமிகள் அனைவரும் இறைவனின் அவதாரமாகவே எண்ணி வழிபட்டனர். இறைவனது சங்கல்பம் பிரம்மானந்தரின் செயலில் வெளிப்பட்டதாகக் கருதினர்.

ஒரு முறை மகராஜ் கூறியதை, சுவாமி சிவானந்தர் உடனே ஏற்றுக்கொண்டார். அப் போது அருகில் இருந்த சுவாமி பிரபவானந் தருக்கு இது பிடிக்கவில்லை. பிறகு தனிமையில் சுவாமி சிவானந்தரிடம், ''மகராஜ் கூறுவதை யெல்லாம் நீங்கள் ஏன் அப்படியே ஏற்றுக் கொள் கிறீர்கள்? இது எனக்குப் பிடிக்கவில்லை'' என்று சுவாமி பிரபவானந்தர் கூறினார்.

அதற்கு, சுவாமி சிவானந்தர், ''குழந்தாய்! மகராஜை மகராஜ் என்ற நிலையில்தான் நீ காண்கிறாய். நாங்கள் அவரது வெளித் தோற்றத்தைவிட, அவரிடம் விளங்கும் தெய்விக இயல்பையே காண்கிறோம். மகராஜ் உனக்குக் கூறுவது இறைவனே நேரில் கூறுவதாகும்'' என்று பதில் சொன்னார்.

சுவாமி பிரம்மானந்தரைப் பற்றிய இந்தக் கருத்து, பாமரத்தன்மை வாய்ந்த சாதாரண ஒரு

பக்தரின் கருத்தல்ல; ஞானஉணர்வு மிக்க ஞானி ஒருவரின் மொழியாகும். ஞானியின் முழு இயல்பை ஞானி ஒருவராலேயேதான் உணர முடியும் என்பதை, சுவாமி சிவானந்தரின் மொழியிலிருந்து உணருகிறோம். சுவாமி பிரபவானந்தரும் இதை உணரத் தக்க வாய்ப்பு அவருக்கு விரைவில் கிடைத்தது.

ஒரு சமயம் பிரம்மானந்தர் சென்னையிலிருந்து புறப்படுவதற்கு, சுவாமி பிரபவானந்தரைப் பஞ்சாங்கம் பார்க்கும்படி கூறினர். அவரும் சிரித்தபடியே அந்தவேலையைச் செய்த போதிலும், பிரம்மானந்தரிடம், ''நீங்கள் ஒவ்வொரு சமயமும் வெளியே செல்வதற்குப் பஞ்சாங்கத்தைப் பார்க்கிறீர்கள். ஆனல் பிறகு அதன்படி செல்லாமல் திடுமெனப் புறப்பட்டுவிடுகிறீர்களே, என்?'' என்று கேட்டார்.

அதற்கு மகராஜ், ''பக்தர்களின் வற்புறுத்தலுக்காக நான் ஏதோ ஒரு நாளை அவர்களுக்குக் குறித்துக் கொடுக்கிறேன். ஆனல் அதன்படி நான் புறப்படுவதில்லை. இறைவனது திருவுள்ளத்தை எதிர்பார்த்து, அது கிடைக்கும் வரை வேறு எதையாவது செய்துகொண்டிருக்கிறேன்'' என்று பதில் கூறினர். அதற்குப் பிரபவானந்தர், ''மகராஜ், நான் என் மனப் போக்கின்படியே நடந்துகொண்டு இறைவன் திருவுள்ளப்படி நடப்பதாக எண்ணிக் கொள்கிறேன். அது போலத்தானே நீங்களும் செய்கிறீர்கள்?'' என்ருர்.

அதற்கு மகராஜ், ''அப்படியல்ல, குழந்தாய்! நான் என்ன செய்ய வேண்டும் என்பதை அவர் எனக்குத் தெரிவிக்கும்படி காத்திருக்கிறேன். அவரது கட்டளை வந்தபிறகே நான் அனைத்தையும் செய்கிறேன். அவரே எனக்கு நேரடியாக அனைத்திற்கும் வழி காட்டுகிருர்'' என்று பதில் கூறினர்.

மகராஜின் இந்தத் திட்டவட்டமான பதிலையும், அவரது விநோதமான நடவடிக்கைகளுக்குப் பின்னணியாக இறைவனின் அருட்செயல் இருப்பதையும் உணர்ந்து சுவாமி பிரபவானந்தர் மௌனமானர். △

# கபீர்தாசரின் வாக்கு



நல்லோய்! இயல்பான தொடர்பே சிறந்தது. கடவுள் அருளால் அந்தத் தொடர்பு ஏற்பட்டதிலிருந்து, அது வளர்ந்து வருகிறது.

நான் எங்கே திரிந்தாலும் அது கடவுளைச் சுற்றி வருவதாகவே இருக்கிறது. நான் என்ன செய்தாலும் அது தொண்டாகவே இருக்கிறது.

நான் எப்போது கீழே படுத்தாலும் அது கடவுள் முன்னிலையில் விழ்ந்து வணங்குவதாகவே இருக்கிறது. என் வாயிலிருந்து வரும் பேச்செல்லாம் கடவுளின் நாமமாகவே இருக்கிறது.

நான் கேட்பதெல்லாம் கடவுளைப் பற்றிய நினைவாகவே இருக்கிறது. உண்பதும், தண்ணீர் குடிப்பதும் எனக்குக் கடவுள் வணக்கமாகவே இருக்கிறது.

காட்டில் வசிப்பதோ, வீட்டில் வசிப்பதோ, எனக்கு எல்லாம் ஒன்றுதான். நான் கண்களை மூடிக்கொள்ளுவதில்லை; காதுகளை அடைத்துக்கொள்ளுவதில்லை; நான் என்னை எவ்விதமான சித்திரவதைக்கும் உட்படுத்திக்கொள்வதில்லை.

கண்களைத் திறந்தால் எனக்கு எந்த இடத்திலும் கடவுளின் அருட்காட்சியாகவே தோன்றுகிறது. அந்தக் காட்சிகள் என்னை வரவேற்று, எனக்கு ஆனந்தத்தைக் கொடுக்கின்றன.

என் மனம் எப்போதும் இறைவனையே நாடுகிறது. கெட்ட எண்ணமெல்லாம் என்னை விட்டு அகன்றுவிட்டது.

எப்போதும் நான் இறைவனையே சிந்தித்துக்கொண்டிருப்பதனல், என் மனதில் வேறு எதற்குமே இடமில்லை. மௌனமாக அனுபவித்து மகிழும் நிலை இதுதான். எனினும், நான் அதைப்பற்றிப் பாடத் துணிந்திருக்கிறேன். அது துக்கம், சுகம் எல்லாவற்றையும் கடந்த நிலையாகும். அந்த நிலையில் நான் லயித்துள்ளேன்.




# எங்கே தேட வேண்டும்?

**விவேகானந்ததாசன்**

ஒரு சமயம் வியர்பாரி ஒருவன், அதிகப் பணத்துடன் தில்லியிலிருந்து சென்னைக்கு ரெயிலில் முதல் வகுப்பில் பிரயாணம் செய்துகொண்டிருந்தான். அதே வகுப்பில் அந்த வியாபாரியின் எதிர் ஸீட்டில் ஒரு திருடனும் பிரயாணம் செய்துகொண்டிருந்தான்.

இரவு படுப்பதற்கு முன்பு, வியாபாரி தன்னிடமுள்ள பணத்தை எண்ணிக்கொண்டிருந்தான். இதைக் கண்ட திருடன் அந்தப் பணத்தை எப்படியாவது அபகரிக்கத் திட்டம் தீட்டினான்.

முதல் நாள் இரவு வியாபாரி தூங்கியபிறகு, திருடன் மெதுவாக வியாபாரியின் பெட்டி, படுக்கை எல்லாவற்றையும் சோதனை போட ஆரம்பித்தான். ஆனால் எவ்வளவு தேடியும் அவனால் பணத்தை எடுக்க முடியவில்லை.

மறுநாள் காலை திருடன் முகம் கழுவிவிட்டு வந்தபோது, அந்த வியாபாரி தன் பணத்தை எண்ணிக்கொண்டிருந்தான். இதைக் கண்ட திருடன் வியப்பினால் பெருமூச்சு விட்டான். இருப்பினும், 'வண்டி சென்னை செல்வதற்கு இன்னும் ஒரு நாள் இருக்கிறது. இன்றிரவு எப்படியும் வியர்பாரியின் பணத்தை எடுத்துவிடலாம்' என்று முடிவு செய்தான்.

அன்றிரவும் வந்தது. வியாபாரி உறங்குவதை நிச்சயம் செய்துகொண்ட பிறகு, திருடன் மீண்டும் தேட ஆரம்பித்தான். அன்றைய முயற்சியிலும் அவனுக்கு ஏமாற்றமே காத்திருந்தது.

மறுநாள் காலையில் திருடன் முகம் கழுவி வந்தபோது, அந்த வியாபாரி தன் பணத்தை எண்ணிப் பார்த்துக்கொண்டிருந்தான். அதைக் கண்டதும் திருடனுக்குக் கோபம் வந்தது. அவன் வியாபாரியைப் பார்த்து, "நீங்கள் இந்தப் பணத்தை எங்கே வைத்திருந்தீர்கள்? நான் எவ்வளவு தேடியும் அகப்படவில்லையே!" என்று கேட்டான்.

அதற்கு வியாபாரி, "என் பணத்தை நீ அபகரிக்க முயலுவாய் என்று தெரிந்துதான், பணத்தை உன் தலையணையின் அடியில் வைத்துவிட்டேன். உன் பொருளை நீ சோதிக்க மாட்டாய் என்று எனக்கு நன்றாகத் தெரியும்" என்று பதில் சொன்னான்.

கடவுள் நம்முடைய இதயத்திலேயே இருக்கிறார். வெளியில் இல்லை. புறத்தில் கடவுளைத் தேடுவது தவறான வழியாகும். உள்முகமாகச் சென்றால்தான் கடவுள் நம்மிடம் இருப்பதை அறிவோம்.

# புறமும் அகமும்

**வி**தேகபுரியை ஜனக மகாராஜா ஆண்டு வந்தார். அவர் நன்கு ஆட்சி செய்து வந்ததுடன், நல்ல சத்சங்கங்களும், சாஸ்திர ஆராய்ச்சிகளும் செய்து வந்தார்.

அவரது சபையில் பிரம்மஞானிகளும் பேரறிஞர்களும் ஞானமுதம் அருந்தக் கூடியிருந்தனர். எங்கும் அவரது சபையைப் பற்றிய புகழ் பரவியிருந்தது.

நல்ல விஷயங்களைக் கேட்கவும் சத்விஷயங்களைப் பற்றிக் கலந்து பேசவும் பல சான்றோர் ஜனகரது சபைக்கு வந்தார்கள்.

ஒரு நாள் அரண்மனை வாயிலில் ஒரு பிரம்மஞானி வந்திருப்பதாகக் காவலர் கூறினர். சபையோர் 'வருவது யார்?' என ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். வந்தவர் பெரிய பிரம்மஞானி. அவர்தாம் அஷ்டாவக்ரர். அவரது உடலில் எட்டு இடங்களில் வளைவுகள் இருந்தன.

அஷ்டாவக்ரரின் வளைந்த தோற்றத்தைக் கண்டு சபையோர் பொருந்தாத வகையில் சிரித்தார்கள். அவர்களின் ஆரவாரம் ஒய்ந்தபின் அஷ்டாவக்ரர் எல்லோருக்கும் மேலாகச் சிரித்தார்.

ஜனகர் அவரது பெருமையை உணர்ந்திருந்தார். எனவே அவர் சாஷ்டாங்கமாக அஷ்டாவக்ரருக்கு நமஸ்காரம் செய்தார். "அவையோர் அறியாமையால் சிரித்தனர். தாங்கள் சிரித்ததற்கு என்ன காரணம்?" என்று அஷ்டாவக்ரரிடம் கேட்டார்.

"ஜனகரே, உங்களுடைய சபையில் ஞானியரும் வேதியரும் சூழ்ந்திருப்பார்கள்; அவர்களுடன் சத் விஷயங்களைப் பற்றிப் பேசி ஆனந்தம் அடையலாம் என்று வந்தேன். ஆனால் உமது சபையில் உள்ளவர்கள் உள்ளே உள்ளதைப் பார்க்கத் தெரியாதவர்களாகப் புறத்தே தோலை மட்டும் மதிப்பிடும் சக்கிலியர் போன்று உள்ளவர்களே. இவர்களைக் கண்டு எனக்குப் பெருஞ் சிரிப்பு வந்தது" என்றார் அஷ்டாவக்ரர்.

அவையோர் வெட்கித் தலை குனிந்தனர். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஜனகரது சபை உண்மையான சத்சங்கமாக விளங்கியது.

கடவுள் புற உலக ஞானத்தை மதிப்பதில்லை. உள்ளார்ந்த அன்பையே விரும்புகிறார். பக்தி இல்லாத புறத் திறமைகள் பகவானை அடைய ஒரு நாளும் உதவமாட்டா.

யாராவது திடீரென்று, ''நீ இப்போது என்ன எண்ணிக்கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டால், உடனே இன்னது என்று பகிரங்கமாகச் சொல்லக்கூடிய விஷயங்களைப்பற்றி மட்டுமே எப்போதும் மனதில் எண்ணும்படி நாம் பழக வேண்டும். —மார்க்கஸ் அரேலியஸ்

'என் பக்கம் அண்டாது' என்று புண்ணியத்தை இலேசாக நினைக்க வேண்டாம். துளித் துளியாக விழும் தண்ணீராலேயே குடம் நிரம்பிவிடும். ஞானி கொஞ்சம் கொஞ்சமாகப் புண்ணியத்தைச் சேர்த்தாலும் அவன் புண்ணியத்தால் நிரம்பிவிடுகிறான். —தம்மபதம்

# காசி விசுவநாதரின் தங்கக் கோவில் வரலாறு

ஸ்ரீராம்சங்கர் த்ரிபாடி தமிழில் : கே. ஆர். நாகராஜன்

காசி விசுவநாதர் கோவிலின் நிர்வாகத் தலைவராக இப்போது ஸ்ரீராம்சங்கர் த்ரிபாடி இருந்து வருகிறார். காசி விசுவநாதர் கோவில், ஸ்ரீராம்சங்கர் த்ரிபாடி அவர்களின் தனிப்பட்ட சொத்தாகும். எனினும் பக்தி, பணிவு, இனிமை, பரோபகாரம் ஆகியவற்றின் வடிவமாக இவர் விளங்குகிறார்.

காசியிலுள்ள விசுவநாதர் கோவிலுக்கு நான்கு வீடுகள் தள்ளி ஸ்ரீராம்சங்கர் த்ரிபாடி அவர்களின் வீடு அமைந்துள்ளது. ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தில் காசியைப் பற்றி வெளியிடுவதற்குத் தகவல்கள் சேகரிப்பதற்காகப் பல முறை இவரை அணுகியுள்ளேன். அப்போதெல்லாம் இவர் காட்டிய அன்பு மறக்கவொண்ணாதது.

இந்த இதழின் அட்டைப் படமாக காசி விசுவநாதர் கோவிலின் தங்கக் கோபுரம் இடம் பெற்றுள்ளது.

—கமலாத்மானந்தர்

காசி நகரம் இப்பொழுது பனாரஸ் அல்லது வாராணசி என்று அழைக்கப்பெறுகிறது.

இந்த நகரின் வாழ்வும் வரலாறும் பற்றிய பலவேறு வகையான விரிவான ஆராய்ச்சிகள் செய்யப்பட்டுள்ளன.

என்றாலும், இந்த நகரில் அமைந்துள்ள விசுவநாதர் ஆலயத்தின் வரலாறும், இந்தப் புண்ணிய நகரின் வாழ்வும் ஜீவனும் இன்னமும்கூட மூடி மறைக்கப்பட்ட மர்மமாகவேதான் இருக்கின்றன!



இது வரையில் எந்த வரலாற்று ஆசிரியரும் காசி மாநகரம் பற்றியும் விசுவநாதர் ஆலயம் பற்றியும் சரியாக ஆராய்வதற்கு முனையவில்லை என்பது இங்கே குறிப்பிடத் தக்கதாகும்.

என்றும் அழியாத தன்மை வாய்ந்த காசி விசுவநாதரைப் போலவே, காசி மாநகருக்கும் ஒரு தொடக்கம், வரலாற்றில் இருந்திருக்கத் தானே வேண்டும்!

அதன் வரலாறு, வரலாற்றுக் காலத்துக்கு மிகவும் முற்பட்டதாகும் என்பதில் ஐயமில்லை.

நம் வேதங்களில், காசிமாநகரம் மிகவும் வளம் நிறைந்த அழகிய நகரமாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

ரிக்வேதத்தில் காசியைச் சேர்ந்த ஐலன் புரூரவஸ்ஸின் வரலாறு இதற்குச் சான்று.

இதே போன்ற சான்றுகள் அதர்வ வேதத்தில் பைப்பலாத ஸம்ஹிதையிலும், சதபதப் பிராம்மணத்திலும், ருத்திர ஸம்ஹிதையிலும், இவை போன்ற வேறு பல பழைய நூல்களிலும் காணப்படுகின்றன.

எனவே, வேதகாலத்திற்கு முன்பே, காசிமாநகரம் மிகவும் முக்கியமான வாழ்வைப் பெற்றிருந்தது என்பதை நாம் நன்கு உறுதிப்படுத்த முடியும்.

படைப்புக் காலத்தின் தொடக்க நாளிலிருந்தே காசி மாநகரம் சிவபெருமானுக்கும் சைவ சமயத்துக்கும் உரிய முக்கியமான தலைமை நிலையமாக விளங்கியது என்பதை வால்மீகி முனிவர் இயற்றிய ராமாயணமும், வியாச முனிவர் இயற்றிய மகாபாரதமும், மற்றும் பல புராணங்களும் விவரிக்கின்றன.

பகவான் புத்தர் தமது முதல் அறிவுரையைக் காசிமாநகரில்தான் தொடங்கினார் என்பதையும், அந்த அறிவுரை பௌத்த சமயத்திற்குச் சிறந்த

செல்வாக்கு மிக்க தொடக்கமாக அமைந்தது என்பதையும் நாம் நன்கு அறிவோம்.

தாம் ஞானேதயம் பெற்றதன் மூலம் கண்டறிந்த உண்மையை எங்கும் பரப்புகிற மாபெரும் பணியைப் பகவான் புத்தர், அதைத் தொடங்குவதற்குக் காசி மாநகரை முதலாவதாகத் தேர்ந்தெடுத்ததற்குத் தெளிவான காரணம் உண்டு. இப்பொழுது இருப்பதைப் போலவே பகவான் புத்தரின் காலத்திலும், இந்து சமயச் சிந்தனைக்கும் பண்பாட்டிற்கும் இந்த நகரம் நிலைக்களனுக விளங்கியது என்பதே அந்தக் காரணமாகும்.

பண்டைக் காலப் பாரதநாட்டு இலக்கியங்கள் எல்லாவற்றிலுமே, காசி-வாராணசி பற்றிய புகழுரைகளும், அங்குள்ள மக்களின் நல்லொழுக்கம் பற்றிய குறிப்புக்களும் நிரம்பியிருக்கின்றன.

இனி, விசுவநாத லிங்கத்தின் வரலாற்றைக் காணத் தொடங்குவோம்.

சிவலிங்க வழிபாட்டின் தொடக்கம் மிகவும் பழங்காலத்தைச் சேர்ந்தது என்று தோன்றுகிறது.

ஹரப்பா மொகஞ்சோதாரோ ஆகிய இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட பழமையான சின்னங்களிலிருந்து, சிவலிங்க வழிபாடு அந்தப் பழங் காலத்தில் பாரத நாடெங்கும் நன்கு பரவியிருந்தது என்பதை விவாதத்திற்கு இடமின்றித் தெளிவாக நாம் விளங்கிக்கொள்ள முடிகிறது.

ஏன்? மொகஞ்சோதாரோ, ஹரப்பா காலத்திற்கு மிகவும் முற்பட்ட காலத்திலேயும் கூடச் சிவலிங்க வழிபாடு நம் நாட்டில் நிலை பெற்று இருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

தெற்கே ராமேச்வரத்தில் உள்ள சிவலிங்கம், மிகப் பழைய ராமாயண காலத்தைச் சேர்ந்ததாகும்.

விசுவநாதரின் ஜ்யோதிர்லிங்கத்தின் ஆன்மிகப் பேரொளியாலும் தெய்விகத் தன்மையினுலும் மிக மிகப் பழங்காலத்திலிருந்தே காசி மாநகரம் புனிதம் பெற்று விளங்கியது.

திருமால், காசி விசுவநாதராகிய அந்த ஜ்யோதிர்லிங்கத்தை முதன்முதலாகத் தரிசித்து, சர்வ வல்லமைத் தன்மையை அவரிடமிருந்து வரமாகப் பெற்ருர் என்ற செய்தி நம் நாட்டுத் தெய்விக நூல்களில் காணப்படுகிறது. இந்த நிகழ்ச்சிக்கு அறிகுறியாகத் திருமாலின் சக்கரத்தால் ஏற்படுத்தப்பட்டதுதான், காசியிலுள்ள மணிகர்ணிகா குண்டம் ஆகும். இன்றும் விளங்குகிற இந்தக் குண்டம், இதே பெயரால் அழைக்கப்பெறுகிற மயானபூமியில் அமைந்துள்ளது.

படைப்புக் கடவுளாகிய பிரம்மதேவர் காசியில் தான் பத்து அச்வமேத யாகம் செய்து முடித்தார். அந்த இடம் காசியில் இப்போது தசாச்வமேத காட் என்று வழங்கப்பெறுகிறது.

இறைவர் விசுவநாதர், ''நான் காசி நகரை விட்டு நீங்குவதில்லை'' என்று உறுதி கூறியுள்ளார். இதனுல், இந்த நகரத்திற்கு, 'அவிமுக்த க்ஷேத்திரம்' எனவும், விசுவநாதருக்கு 'அவிமுக்தேச்வரர்' எனவும் பெயர்கள் அமைந்துள்ளன.

'பனாஸ்—அன்றும் இன்றும்' என்ற தமது நூலில், டாக்டர் அம்பேத்கார் கூறுகிருர்:— ''இந்த நகரின் மகாதேவர் வழிபாடு மிகவும் பழமையானதாகும். இங்கு உள்ள விசுவநாத லிங்கம், வேதகாலத்தைச் சேர்ந்த மகாதேவரின் மகிழ்ச்சி நிரம்பிய திருக்கோலத்திற்கு அடையாளமாக விளங்குகிறது. இந்த இறைவரே பழைய வேதகாலத்திற்கு முற்பட்ட நம் இந்து சமயக் கடவுளாக விளங்குகிருர். இவரே காசி நகரின் முக்கிய இறைவர் ஆவார்.''

காசி மாநகர் முழுவதுமே சிவன் ஊடுருவியுள்ளார். இந்த நகரிலுள்ள ஒவ்வொரு சிறு கல்லும் கூடச் சிவலிங்கமே ஆகும் என்பர்.

ஜ்யோதிர்லிங்கம் முதன்முதலாகத் தோன்றிய இடம் எது என்பதை நாம் முடிவுசெய்வது கடினமாகும். ''காசி விசுவநாதருக்கு ஏற்படுத்தப்பட்ட முதற் கோயில் எங்கே இருக்கிறது?'' என்ற கேள்விக்கு நாம் பதில் சொல்ல முடியாது. நமது வரலாற்று ஆசிரியர்கள் இந்தத் துறையில் இன்னமும் எந்த உண்மையையும் கண்டறியவில்லை.

காசி நகரின் வடக்கில் கங்கையாறும் வருணை யாறும் கூடும் இடத்திற்கு அருகில், ராஜகட்டத் தில் செய்யப்பட்ட அகழ்வாராய்ச்சிகள் சில உண்மைகளை ஓரளவிற்குத் தெளிவுபடுத்தி யுள்ளன. அவிமுக்தேச்வரரின் தோற்றநிலையும் உண்மையும் ஐயத்திற்கு இடமின்றி நிரூபிக்கப் பட்டுவிட்டன. இறைவர் விசுவநாதர், அவிமுக் தேச்வரர் என்ற திருப்பெயரால்தான் அழைக்கப் படுவதை நாம் முதன்முதலாக அறிகிறோம்.

'காசீ கண்டம்' என்ற நூலிலிருந்து, அவிமுக் தேச்வரர் என்ற பெயர் பின்பு விசுவநாதர் என்று மாறியதாக நாம் அறிகிறோம்.



அப்படியானால் அந்தக் காலத்தில் விசுவநாத ரின் ஆலயம் எங்கே அமைந்திருந்தது? இந்தக் கேள்விக்கு உரிய விடையைக் 'காசீ கண்டம்' அளிக்கிறது. அந்த நூலில் காசியைப்பற்றிய எல்லாச் செய்திகளும் விவரிக்கப்பட்டுள்ளன. அந்த நூலின்படி, 'ஞானவாபி'க்கு வடக்கே, 'கர்மைகேல் நூல்நிலைய'த்திற்கு அப்பால், 'லாஜ பத்ராய் சாலை'யைக் கடந்து பரவியுள்ள பெரு நிலத்தில், இன்று முஸ்லிம்களின் மசூதி அமைந் துள்ள இடத்தில், முற்காலத்தில் விசுவநாதரின் ஆலயம் அமைந்திருந்தது என்பதை நாம் தெளி வாக அறிகிறோம்.

விசுவநாதரின் ஆலயம் நகரின் நடுவில் இருந்த தாகவும், மற்ற எல்லா ஆலயங்களுக்கும் 'ஞான வாபி'க்கும் மையமான இடத்தில் விளங்கியதாக வும் காசீ கண்டம் குறிப்பிடுகிறது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இடையில் சீனப் பயணி, ஹ்யூன்சாங், போ-லோ-னி-சி (வாரணா சி)க்கு வருகை புரிந்தார். அவர் தாம் எழுதிய 'சியூக்கி' என்ற சீனமொழி நூலில், மகேச்வர தேவரின் (காசி விசுவநாதரின் அந்தக் காலப் பெயர்) ஆலயம்பற்றி விவரிக்கிறார். 'மணி கர்ணிகா' என்ற மயானபூமியின் அருகில் இந்தக் கோவில் அமைந்திருந்ததாக அவர் குறிப்பிடுகிறார்.

பௌத்த சமயத்தினரின் ஆதிக்கம் நிறைந் திருந்த அந்தக் காலத்திலும்கூட, இந்த ஆலயத் தின் முக்கியத்துவம் குறைந்துவிடவில்லை.

இன்று, ஔரங்கஜேப் கட்டிய மசூதி அமைந் திருக்கிற அதே இடத்தில், விசுவநாதரின் ஆலயம் அமைந்திருந்தது. பழைய இடத்தின் அருகில், பௌத்தத் துறவிகள் ஒரு மடாலயம் கட்ட இடம் தேர்ந்தெடுத்தனர் என்ற குறிப்பி லிருந்து சைவசமயத்தின் செல்வாக்கு நிரூபணம் ஆகிறது.

கி. பி. பத்தாம் நூற்றாண்டில் கஹர்வார் மன்னர்களின் ஆட்சிக் காலத்தில்தான் விசுவேச் வரர், விசுவநாதர் என்ற பெயரால் குறிக்கப் படலானார்.

கி.பி. 1198-ஆம் ஆண்டில், கஹர்வார் மரபின் கடைசி மன்னனாகிய ஜயசந்திரனை முகமது கோரியும், அவனது படைத் தலைவர் களில் ஒருவனான குத்புதீன் ஐபக் என்பவனும் தோற்கடித்தார்கள். காசிமாநகரின் புகழ்பெற்ற விசுவநாதர் ஆலயத்தையும், மற்றும் எண்ணற்ற பல ஆலயங்களையும் தரைமட்டமாக அவர்கள் இடித்துத் தள்ளினார்கள்.

கி. பி. 1217-1226 ஆண்டுகளில் ஆட்சி புரிந்த ஷம்ஷுதீன் இல்துத்முஷ் என்ற மன்னனின் காலத்தில், முன்பு தரைமட்டமாக்கப்பட்ட ஆலயம் அமைந்திருந்த அதே பழைய இடத்தின் அருகில், விச்வேச்வரர் அல்லது விசுவநாத ருக்குப் புதிய ஆலயம் கட்டப்பட்டது. 'காசியின் பழைய வரலாறு' என்ற நூலில் டாக்டர் மோதீ சந்திரர் இதனை அறிவிக்கிறார்.

ஏறத்தாழ இதே காலத்தில்தான், குஜ ராத்தைச் சேர்ந்தவரும், மிகவும் புகழ் வாய்ந்த செல்வருமான வாஸ்துபால் ஸேட் என்பவர், விசுவநாதர் ஆலயத்தின் வழிபாட்டிற்காக ஒரு

லட்சம் ரூபாய் நன்கொடையாக வழங்கினர். இந்த நன்கொடை பற்றிய ஆவணக் குறிப்பிலிருந்து இந்தச் செய்தி நமக்குத் தெரிய வருகிறது.

ஃப்யூத்ரர் என்பவர் எழுதிய, 'ஜோன்பூரின் ஷாஹி கட்டிடக்கலை' என்ற நூலில், கி. பி. 1296-ஆம் ஆண்டில், காசி மாநகரில் விசுவேச்வரரின் ஆலயம் நிலைபெற்றிருந்தது என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஜோன்பூரிலுள்ள, லால் தர்வாஜா மசூதியில் உள்ள தூண் ஒன்றில் பொறிக்கப்பட்ட கல்வெட்டிலிருந்து, கி. பி. 1296-ஆம் ஆண்டில் விசுவேச்வரர் ஆலயத்தின் முன்புறத்தில் பத்மேச்வரர் ஆலயம் கட்டப்பட்டிருந்ததாக அறிகிறோம்.

கி. பி. 1325-1351-ஆம் ஆண்டுகளில் ஆண்ட முகம்மது துக்ளக்கின் சமகாலத்து மன்னனான ஜினபிரபஸூரி என்பவன், தான் எழுதிய நூலில், ''விசுவநாதரின் ஆலயம் இருந்த பகுதி, தேவவாராணசி என அழைக்கப்பட்டது'' எனக் குறிப்பிட்டுள்ளான்.

மதவெறிக்குப் பெயர்பெற்ற முஸ்லிம் மன்னர்களின் ஆட்சிக் காலத்தில், காசி விசுவநாதர் ஆலயம் பல முறை தரைமட்டமாக இடிக்கப்பட்டது.

புகழ் பெற்ற இந்த ஆலயத்தைக் குத்புதீன் ஐபெக் எவ்வாறு தரைமட்டமாக இடித்துத் தள்ளினன் என்பதை முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம்.

கி. பி. 1447-ஆம் ஆண்டில், காசி விச்வேச்வரர் ஆலயத்தின் முன்னால் கட்டப்பட்டிருந்த பத்மேச்வரரின் ஆலயம் முகமதிய வெறியர்களால் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டது. அதிலிருந்து எடுத்துச் சென்ற கற்களைக் கொண்டு, ஜோன்பூரில் லால் தர்வாஜா மசூதி கட்டப்பட்டது.

இந்தச் செய்தியிலிருந்து, பத்மேச்வரரின் ஆலயத்துடன்கூட விச்வேச்வரரின் ஆலயமும் முஸ்லீம் வெறியர்களால் அக்காலத்தில் தரைமட்டமாக இடிக்கப்பட்டது என்பதை நாம் குறிப்பிட்டுக் காட்ட முடியும்.

உசேன் ஷா சிக்கந்தர் லோதி ஆகிய முஸ்லீம் கொடுங்கோலர்களின் ஆட்சிக் காலத்திலும் விசுவநாதர் ஆலயம் தரைமட்டமாக இடிக்கப்பட்டது.

பேரரசர் அக்பரின் ஆட்சிக் காலத்தில் கி. பி. 1585-ஆம் ஆண்டில், காசிநகரின் தலைமை அர்ச்சகர், நாராயண பட்டர் என்பவர், அக்பரின் பிரதானிகளில் ஒருவராக விளங்கிய ராஜா தோடர்மல் என்பவரின் உதவியுடன் 'ஞானவாபி'யில் இருந்த புத்த விகாரம் அமைந்திருந்த அதே இடத்தில், விசுவநாதரின் ஆலயத்தை மீண்டும் கட்டினர். அதே இடத்தில்தான் இப்பொழுது ஔரங்கஜேப் கட்டிய மசூதி அமைந்திருக்கிறது.

நாராயண பட்டர் தாம் கட்டிய ஆலயத்தில், மறைவிடத்தில் இருந்த பழைய விசுவநாதலிங்கத்தை மீண்டும் கொண்டுவந்து நிலைநாட்டினர்.

மதவெறி பிடித்த இஸ்லாமியர் படையெடுத்து விசுவநாதர் ஆலயத்தை அழிக்க வருவதற்கு முன்னால், பக்தர்கள் சிவலிங்கத்தை அங்கிருந்து அகற்றிப் பத்திரமான மறைவிடத்தில் மறைத்து வைப்பது வழக்கம் என்பதை, நம்பத் தகுந்த ஆவணக் குறிப்புக்கள் வாயிலாக நாம் நன்கு அறிகிறோம். இவ்விதம் இஸ்லாமியரின் கொடுமைக்கு அஞ்சி, காசி விசுவநாதர் சிவலிங்கத்தை ஆலயத்திலிருந்து மறைத்து வைக்க வேண்டிய அவசியச் செயல் பல முறை திரும்பத் திரும்ப நடைபெற்றிருக்கிறது.

நாராயண பட்டர் இந்தக் கோயிலைக் காசி நகரில் மீண்டும் கட்டியதற்கு ஆன செலவு 45,000 தீனர் (அக்பரின் ஆட்சிக் காலத்தில் வழக்கத்தில் இருந்த தங்க நாணயம்). இந்தச் செலவு முழுவதும் பேரரசர் அக்பரால் அவரது மொகலாயப் பேரரசின் கருவூலத்திலிருந்து கொடுக்கப்பட்டது என ஆவணம் கூறுகிறது.

கி. பி. 1194-ஆம் ஆண்டில், குத்புதீன் என்ற முகமதிய வெறியனல் விச்வேச்வரரின் மூலக் கோயில் தரைமட்டமாக இடிக்கப்பட்டது. அந்தக் காலம் முதல், கி. பி. 1585-ஆம் ஆண்டுவரையில்

விசுவநாதருக்குப் பெரிய ஆலயம் எதுவும் காசி நகரில் நிலைபெற்றிருந்ததாக ஆவணங்களின் மூலம் அறிய இயலவில்லை.

ஆனால், அதே சமயத்தில், விசுவநாதர் இல்லாமல் காசி நகரம் என்றுமே இருந்ததில்லை என்பதற்கு எண்ணற்ற சான்றுகள் உள்ளன.

விசுவநாதர் இந்த நகரில் எப்பொழுதுமே நீங்காமல் இருந்திருக்கிறார். நம் பாரதநாட்டின் எல்லாப் பகுதி மக்களுமே இவரை வழிபட வந்த வண்ணம் இருந்திருக்கிறார்கள். 'பிரபந்தகோசம்' என்ற நூல், மேலே நாம் குறிப்பிட்ட பத்மேச்வரர் ஆலயக் கல்வெட்டுக்கள், ஜினபிரபஸூரி எழுதிய 'விவித தீர்த்த கல்பம்' என்ற நூல் ஆகியவை இந்த உண்மையை நாம் ஐயமின்றி அறியப் போதிய சான்றுகளாகும்.



முகமதியப் படைவீரர் அகன்றவுடனேயே, உடைக்கப்பட்ட விசுவநாதர் ஆலயம் இருந்த இடத்திலேயோ அல்லது அதன் அருகிலேயோ ஹிந்துக்கள் சிறிய ஆலயம் ஒன்றைக் கட்டி, அதில் சிவலிங்கத்தை இடையீடின்றி வழிபட்டு வந்தார்கள் என நம்பப்படுகிறது. ஆலயத்தின் புனிதத்தன்மை பல முறை கெடுக்கப்பட்டுப் பல முறை யவனர்களால் தரைமட்டமாக இடிக்கப் பட்டபோதிலும்கூட, சிவலிங்கம் பல முறை இடத்திற்கு இடம் மாற்றப்பட்டபோதிலும்கூட, சிவலிங்கமும், சிவாலயம் இருந்த இடமும் தூய்மை குறையாமல், தெய்வத்தன்மையுடனேயே இருக்கும் எனவும், அவை வழிபடுவதற்குத் தகுதியானவையாகவே விளங்கும் எனவும், 'திரிஸ்தலீ ஸேது' என்ற நூலில் உறுதியாகவும் தெளிவாகவும் கூறப்பட்டுள்ளது.

மேலும், நம் இந்து மரபும் இந்தச் செயலுக்கு மிகவும் உறுதியான ஆதரவு அளிக்கிறது.

முந்நூற்றுத் தொண்ணூற்றோர் ஆண்டுகள் காசிநகரில் விசுவநாதலிங்கம் இல்லாமலிருந்தது என்று கற்பனை செய்யப்படுமானால், பிறகு, விசுவநாதரின் தரிசனத்திற்காக நெடுங்காலமாக மக்கள் காசிக்கு வருகை புரியும் வழக்கம் இருந்தது என்பதை நாம் நிலைநாட்ட முடியாமற் போய்விடும். அப்பொழுது, ஸோமநாதரின் ஆலயம் போலவே, விசுவநாதரின் ஆலயமும் ஏறத்தாழ மறக்கப்பட்டதாக ஆகிவிட்டிருக்கும்.

பிறகு, மீண்டும் கி. பி. 1669-ஆம் ஆண்டில், இந்துமதத்தை அழிப்பதற்கு எல்லா வகையான முயற்சிகளையும் மேற்கொண்ட ஔரங்கஜேப், காசியில் நாராயண பட்டர் கி. பி. 1585-இல் அக்பர் காலத்தில் கட்டிய விசுவநாதரின் ஆலயத்தைக் கொள்ளையடித்தான்.

ஔரங்கஜேப்பின் மூத்த சகோதரன் தாரா ஷிகோஹ் என்பவன், காசி நகரில் அதிகக் கவர்ச்சி கொண்டிருந்தான். அவன் இந்துசமய வேதாந்த தத்துவத்தை இந்த நகரில்தான் பயின்றான். அவன் நம் இந்துசமயத்தில் ஆழ்ந்த பற்றும் கொண்டிருந்தான்.

விசுவநாதர் ஆலயத்தின் அப்போதைய அர்ச்சகராக விளங்கிய பீம்ராம் என்பவருக்குத் தாரா ஷிகோஹ் கி. பி. 1655-1656 (ஹிஜ்ரி 1067)-இல் அளித்த நன்கொடை, ஔரங்கஜேப்பை ஆத்திரமடையச் செய்திருக்கக்கூடும்.

கி. பி. 1665-ஆம் ஆண்டில், மேவார் மன்னர் மகாராணா ராஜ்சிங் என்பவர் காசிக்கு வருகை புரிந்து, விச்வேச்வரரை வழிபட்டிருக்கிறார். ஔரங்கசீப் இந்த ராணா மன்னரின் பரம வைரியாக விளங்கியவன். எனவே, எரிச்சல் கொண்ட ஔரங்கஜேப், வேண்டுமென்றே ஆலயத்தின் தூய்மையைக் கெடுத்துக் கொள்ளையும் அடித்துக் கோயிலையும் இடித்த செயலை மேற்கொண்டதற்குப் போதிய அரசியல் நோக்கமும் இருந்தது என நாம் ஊகிக்க முடிகிறது.

ஆனால், ஔரங்கஜேப்பினால் வெறும் ஆலயத்தை மட்டும்தான் தரைமட்டமாக்க முடிந்தது.

விசுவநாதலிங்கம் ஆலயத்திலிருந்து அகற்றப்பட்டு, ஞானவாபியில் ஒரு கிணற்றில் மறைத்து வைக்கப்பட்டது. காசி நகரின் முக்கிய ஆலயமாகிய விசுவநாதரின் ஆலயத்தைத் தரைமட்டமாக இடித்துத் தள்ளி, அதன் இடிபாடுகளைக் கொண்டு, அதே இடத்தில் ஒரு மசூதியைக் கட்டுவதற்கு உடனடியாக ஆணை பிறப்பித்த பிறகே, ஔரங்கஜேப் அங்கிருந்து கிளம்பினன்.

அந்த இடத்தில் மசூதியைக் கட்டினல்தான், இந்துக்கள் அதை மீண்டும் பயன்படுத்தமாட்டார்கள் என்பது அவன் எண்ணமாக இருந்தது.

ஆனல், ஔரங்கஜேப் அங்கிருந்து சென்றவுடன், இந்துக்கள் இன்று ஆலயம் இருக்கிற இடத்தில் சிறிய கோயில் ஒன்று கட்டி, கிணற்றில் மறைத்து வைத்திருந்த சிவலிங்கத்தை வெளியே கொண்டுவந்து, நிலைநாட்டி, மீண்டும் வழிபடத் தொடங்கிவிட்டார்கள். முன்பு போல் தங்கள் வழிபாட்டைத் தொடரலானர்கள்.

'இந்துக்களின் புனித நகரம்—பனரஸ் நகரின் வரலாறு' என்ற தமது நூலில், 'ஷெர்ரிங்' என்பவர் பின்வருமாறு கூறுகிறர்:—

''இடிக்கப்பட்ட பழைய ஆலயத்தில் இருந்த வேறு பல திருவுருவச் சிலைகளும்கூட அங்கிருந்து கொண்டு வரப்பட்டு, இப்பொழுது உள்ள விசுவநாதர் ஆலயத்தின் பெரிய மண்டபத்தில், மகாதேவரின் அரண்மனை என்ற இடத்தில் நிலை நாட்டப்பட்டன. இந்த உருவச்சிலைகள் எல்லாம் நவீன காலத்தில் உண்டாக்கப்பட்டவை அல்ல என்று உறுதியாக நாம் சொல்லலாம். இந்த உருவச்சிலைகளின் வயது, எப்படியும், எத்தனை ஆண்டுகளுக்கு முந்தியது என அறியக் கூடவில்லை. கி. பி. 17-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த பேரரசன் ஔரங்கஜேப்பினல் இடிக்கப்பட்ட பழைய விச்வேச்வரர் ஆலயத்திலிருந்து இவை எடுத்துக் கொண்டு வரப்பட்ட காரணத்தாலேயே இவற்றின் வயது நமக்குப் புலப்படவில்லை.''

இந்தச் சிறிய திருவுருவங்கள் ஆலயத்திலிருந்து அப்புறப்படுத்தப் பட்டிருக்குமாயின் தலைமைத் திருவுருவமாகிய விசுவநாதலிங்கம் உடைக்கப்படுவதற்கு ஏற்ற வண்ணம் ஆலயத்திலேயே இருந்திருக்கும்! இதனல், படையெடுத்து வந்த இஸ்லாம் வெறியனுக்குப் புனிதத் தன்மையைக் கெடுப்பதற்கும், சிவலிங்கத்தை உடைப்பதற்கும் வசதியாய் இருந்திருக்கும். ஸோமநாதர் ஆலயத்திற்கு அன்னியரால் ஏற்பட்ட அடாத செயல், இந்துக்களுக்குச் சிறந்த படிப்பினையாக அமைந்துவிட்டது! அதனல், காசி நகரத்துப் பூசாரிகள் எது இயற்கையானதோ, தெளிவானதோ, அதையே செய்திருக்க வேண்டும். இதற்கு முன்னல், எண்பத்துநான்கு ஆண்டுகளுக்கு முன்பு, நாராயண பட்டரும் இதே செயலைத்தான் செய்தார். அவர் ஆலயத்தைத்தான் புதிதாய்க் கட்டச் செய்தாரே தவிரப் பழைய ஆலயத்தின் சிவங்கத்தைத்தான் அதில் நிலைப்பெறச் செய்தார்.



பிறகு, நூற்றெட்டு ஆண்டுகளுக்குப் பின்பு இந்தூர் மகாராணி அகல்யாபாய் இப்பொழுது உள்ள சிவலிங்கத்தைச் சுற்றியுள்ள ஆலயத்தைக் கட்டச் செய்தார். இந்த உண்மையை உறுதிப்படுத்துவதற்கு உரிய கல்வெட்டு இப்பொழுதும் ஆலயத்தில் காணப்படுகிறது.

இந்தக் கல்வெட்டில், இந்தூர் மகாராணி அகல்யாபாய் தாம் சிவலிங்கத்தை நிலைநாட்டியதாக எங்கும் சொல்லிக்கொள்ளவில்லை என்பது இங்கே நாம் குறிப்பிடத் தக்கதாகும். ஆலய நிர்மாணம் பற்றி மட்டுமே இதில் குறிக்கப்பட்டுள்ளது.

கி. பி. 1839-ஆம் ஆண்டில், பஞ்சாப் மன்னர் ரணஜித்சிங் இந்த ஆலயத்திற்குப் பொன்வேய்ந்தார்.

ஔரங்கஜேப் ஆலயத்தை இடித்த கி. பி. 1669-ஆம் ஆண்டிலிருந்து, இப்பொழுது உள்ள

ஆலயம் கட்டப்பட்ட கி. பி. 1777-ஆம் ஆண்டு வரையிலான வரலாற்றை, இந்தக் கோயிலின் தீர்த்த புரோகிதர்கள் தெளிவாக அறிந்திருக்கிறார்கள்.

இந்தத் தீர்த்த புரோகிதர்கள், பரம்பரையாக யாத்திரிகர்களுக்கு வழிகாட்டும் தொழிலைச் செய்து வருவோர் ஆவர். இவர்களின் நூலில், ஔரங்கஜேப் இந்த ஆலயத்தைக் கொள்ளையடித்ததற்குப் பின் மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, அதாவது கி. பி. 1672-ஆம் ஆண்டில், ரேவா நாட்டின் மன்னர் மகாராஜா பாவாசிங், காசி விசுவநாதரை வழிபடுவதற்காக இங்கு வருகை புரிந்தார் என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

கி. பி. 1676-ஆம் ஆண்டில், மகாராணா ஜகத் சிங் இங்கு இறைவரை வழிபட வந்தார். இன்றைய ஆலயத்தில் ஜவனீச்வரர் என்ற சிவலிங்கத்தையும் அவர் நிலைநாட்டினார்.

எனவே, மிக முன்னதாகிய காலத்தில், மகாராணி அகல்யாபாய் இன்றைய ஆலயத்தைக் கட்டியதற்கு முன்னாலிருந்தே, விசுவநாதலிங்கம் இதே இடத்தில் எப்பொழுதும் பழைய புகழுடன் இருந்து வந்திருக்கிறது என்பதையும், நம் பாரத நாட்டின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் இவரை வழிபடுவதற்கு வந்தபடி இருந்திருக்கிறார்கள் என்பதையும் விளக்குவதற்கு, மேலே காட்டிய சான்றுகளே போதுமானவை ஆகும்.

இந்த அரச குலத்தினர் காசி நகருக்கு உல்லாசமான கேளிக்கை புரியவே வந்தார்கள் என்பதையோ, இல்லாத சிவலிங்கத்தை வழிபடுவதற்கு வந்தார்கள் என்பதையோ நாம் உறுதியாக ஒப்புக்கொள்ள முடியாது. பழைய ஆலயம் மிகவும் சிறியதாகவும் அடக்கமாகவும் ஒருகால் இருந்திருக்கலாம்.

முடிவாக, காசி நகரம் விசுவநாதர் இல்லாமல் இருந்ததே இல்லை என்பதை உறுதிப்படுத்துவதற்குத் தீர்த்த புரோகிதர்களின் நூலில் மேலும் எண்ணற்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன.

அன்னியர் ஒருவர் பின் ஒருவராகப் படையெடுத்து வந்தார்கள், காசி நகரைக் கொள்ளையடித்தார்கள், விசுவநாதர் ஆலயத்தை ஒன்றன் பின் ஒன்றாக இடித்துத் தள்ளினார்கள்; ஆனால், இடிக்கப்பட்ட இடிபாட்டுக் குவியலிலிருந்து, எப்பொழுதுமே புதிய ஆலயம் கம்பீரமாக மீண்டும் மீண்டும் எழும்பி நின்றிருக்கிறது! அதில், விசுவநாத ஜோதிர்லிங்கம், இந்த உலகத்திற்கே ஆண்டவராகத் தெய்விக ஒளியுடன் நிலைபெற்று விளங்கியிருக்கிறார்! △

# எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள் (கவிதைகள் அனுப்ப வேண்டாம்), மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முதலிய எதையும் தபால்மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும், கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம். காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ்நடையில் தெளிவாக எழுத வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெறாத அன்பர்கள் போதிய தபால்தலைகளை அனுப்பி வைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

ஆசிரியர்
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

# வேதாந்தச் சிந்தனை

தொகுப்பு : ஆர். ரங்கஸ்வாமி

[முக்கூர் உ. வே. லக்ஷ்மீநரசிம்மாசாரியரின் சொற்பொழிவுகளிலிருந்து தொகுத்தவை]

**பி**த்ரு கர்மாக்களைச் சரியாகச் செய்யாதவர்களின் குலத்தில் கூன் குருடு போன்ற குறையுள்ள குழந்தைகள் பிறப்பார்கள்.

பித்ரு கர்மாவை முறையாகச் செய்ய முடியாதவர்கள் யாருக்காவது அன்னமளிக்கலாம். முடியாவிட்டால் எள் தானம் செய்யலாம். அதுவும் இயலாவிட்டால் கட்டைவிரலை ஈரமாக்கி எள்ளில் அழுத்தி அந்த எள்ளை நீருடன் வார்த்துக் கொடுக்கலாம். அதுவும் முடியாவிட்டால் பசுவுக்குப் புல் அறுத்துப்போட்டு அதை ஏற்றுக் கொள்ளுமாறு பித்ருக்களை இறைஞ்ச வேண்டும். இதையும் செய்ய இயலாதவர்கள் வெளியே வந்து ஆகாயத்தைப் பார்த்து இரு கைகளையும் நீட்டித் தமது இயலாமையைச் சொல்லித் திருப்தி அடையுமாறு பித்ருக்களை வேண்டிக் கொள்ளலாம்.



பித்ருதினத்தன்று சிராத்தம் செய்வதனால் மனிதர்களுக்கு அன்னம் இடப்படுகிறது. காக்கைக்குப் பிண்டம் போடப்படுகிறது. பசுவுக்குப் பிண்டங்கள் போடப்படுகின்றன. வீடு முழுவதும் அரிசியும் எள்ளும் இறைக்கப்படுவதனால் எறும்பு முதலியவை இவற்றை உண்டு திருப்தியடைகின்றன. இவ்வாறு மனிதர்கள், பறப்பன, ஊர்வன, நடப்பன ஆகிய எல்லாவகை ஜீவராசிகளுக்கும் உணவு அளிக்கப்படுகிறது.

* * *

**கோ**விந்தன் என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. வேதங்களைக் காத்தவன் என்ற பொருளில் மத்ஸ்ய அவதாரத்தையும், பூமியைக் காத்தவன் என்ற பொருளில் வராக அவதாரத்தையும், சினம் தணிய வேண்டி அனைவராலும் துதிக்கப்பெற்றவன் என்ற பொருளில் நரசிம்ம அவதாரத்தையும், பூமியை அளந்தவன் என்ற பொருளில் வாமன அவதாரத்தையும், மலையைத் தாங்கி நின்றவன் என்ற பொருளில் கூர்ம அவதாரத்தையும், உலகம் முழுவதும் ஸஞ்சாரம் செய்தவன் என்ற பொருளில் பரசுராம அவதாரத்தையும், அஸ்திரங்கள் அனைத்தையும் கற்றவன் என்ற பொருளில் ராம அவதாரத்தையும், பசுக்களைக் காத்தவன் என்ற பொருளில் கிருஷ்ணவதாரத்தையும், யமுனை நதியை உழுதவன் என்ற பொருளில் பலராம அவதாரத்தையும், உலகைக் காப்பவன் என்ற பொருளில் கல்கி அவதாரத்தையும் ஆக தசாவதாரங்களையும் தன் பொருளடக்கமாகக் கொண்டுள்ள விசேஷமான திருநாமம் இது.

* * *

**பா**ண்டவர் ராஜசூய யாகம் புரிந்தபோது, மகாவிஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்களால் ஆயிரம் அந்தணர்களை எழுந்தருளச் செய்து அவர்களுக்கு உணவளிக்க வேண்டும் என்ற கிருஷ்ணனின் யோசனைப்படி ஸமாராதனை நடந்தது. விருந்துபசாரத்துக்குப் பொறுப்பேற்ற பீமன் அந்தணர்களை வற்புறுத்தியும் மிரட்டியும் அதிகம் உண்ணும்படி செய்து வந்தான். பீமனின் தொல்லையால் நாளுக்கு நாள் கூட்டம் குறைந்து வந்தது. இதைக் கண்ட கிருஷ்ணன் பீமனை ஒரு மகரிஷியைத் தரிசித்து வர அனுப்பினான். பீமன் அவரைக் காணச் சென்றான்.

அந்த மகரிஷியின் உடலிலிருந்து பிரகாசமான ஒளி வீசியது. ஆனல் அவர் வாய்திறந்து பேச ஆரம்பித்ததும், வாயிலிருந்து தாங்க முடியாத துர்நாற்றம் வீசியது. இதற்கான காரணத்தைப் பீமன் பணிவுடன் வினவ, அவர் சொன்னர்: ''போன பிறவியில் நான் பெருஞ் செல்வனக இருந்து எல்லாருக்கும் தானம் கொடுத்தேன். அதனல் என் உடலில் ஒளி வீசுகிறது. ஆனல் யாசகத்துக்கு வந்தவர்களைக் கடுமையான வார்த்தைகளால் பேசினேன். அதனல் என் வாயில் துர்நாற்றம் வீசுகிறது.''



விருந்து உபசாரத்தின் பொருட்டு அதிதிகளை வற்புறுத்திக் கடிந்தும் நிந்தித்தும் பேசிய தன் தவற்றைப் பீமன் உணர்ந்தான்.

* * *

நாம் மைசூர் ரசம் சாப்பிட்டுவிட்டுக் கைகழுவி அரைமணி நேரத்துக்குப் பிறகு கையை மோந்து பார்த்தால், அப்போதும் ரசத்தின் மணம் கையில் இருக்கிறது. இந்த வாஸனைக்கே இவ்வளவு சக்தி என்ருல், பல ஜன்மங்களாகப் பலவிதக் கெட்ட செய்கைகளின் தொடர்பு கொண்டு வரும் ஆத்மாவுக்கு அந்தத் தீய செய்கைகளின் 'வாஸனை' அவ்வளவு சுலபமாகப் போய்விடுமா?

இந்த வாஸனையைப் போக்கிக்கொள்ள வழி இறைவனின் திருநாமத்தை ஓதுவதுதான். தவறுகளுக்குப் பிராயச்சித்தம் செய்வதனல் அவற்றின் வாஸனையைப் போக்கிவிட முடியாது. மீண்டும் மீண்டும் தவறு செய்ய நேரலாம். ஒரு மூங்கிற்காட்டை நெருப்பு அழித்துவிட்டாலும், ஆறுமாதம் கழித்துப் பார்த்தால் மீண்டும் மூங்கில் செழித்து வளர்ந்திருக்கும். இதற்குக் காரணம் நெருப்பு மூங்கிலின் அடிவேரை எதுவும் செய்யாமல் விட்டுவிடுவதுதான். இதுபோலத் தான் பிராயச்சித்தங்களாலும் வாஸனைகளைப் போக்க முடியாது.

* * *

இறந்த உடல் 'சிதை'யில் இட்டு எரிக்கப் படுகிறது. மனக் கவலையைக் குறிக்கும் வார்த்தை 'சிந்தை.' சிதையைவிடச் சிந்தை கொடியது. ஏனெனில், சிதை இறந்த உடலைத் தான் அழிக்கிறது. ஆனல் சிந்தை உயிருடன் இருப்பவர்களையே சிறிது சிறிதாக அழித்து விடுகிறது.

* * *

''ஆற்றில் மிதந்து வரும் இரண்டு கட்டைகள் அலைகளினல் தள்ளப்பட்டு ஒன்றுசேர்ந்து சிறிது தூரம் ஒன்ருகச் செல்லலாம். பிறகு இன்னேர் அலையினல் அவை பிரிக்கப்பட்டு எங்கோ போய் விடும். இந்த உலகில் நாம் ஏற்படுத்திக் கொள்ளும் கணவன், மனைவி மற்றும் எல்லா உறவுகளும் இது போலத்தான். பாவ புண்ணியங் களாகிய அலைகளே உலகில் நம்மைச் சிறிது காலம் சேர்த்தும், பின்பு பிரித்தும் வைக்கின்றன.'' —ஸ்ரீராமபிரான் கூறியது.

* * *

யமுனையின் இக்கரையில் கண்ணன் தூக்கம் வராமல் படுத்திருக்கிருன். ருக்மணி காரணம் புரியாமல் அவனை வினவினள். ''அக்கரையில் இருக்கும் ராதை தூங்கவில்லை; அதுதான் நானும் தூங்கவில்லை'' என்கிருன் கண்ணன்.

ராதை தினமும் தூங்கப் போவதற்கு முன் சுண்டக் காய்ச்சிய பாலைக் குடிப்பாள். அன்று அவளுக்கு யாரும் பால் கொடுக்கவில்லை. அதனல்தான் அவள் தூங்கவில்லை என்று அறிந்துகொண்ட ருக்மிணி தானே பாலைக் காய்ச்சி எடுத்துப் போய் ராதைக்குக் கொடுக் கிருள். தன்னைத் தேடி வந்து ருக்மிணியே பால் கொடுத்து உபசரிப்பதைக்கண்டு பிரமித்த ராதை, பால் கொதிப்பதைக்கூட உணராமல் அப்படியே குடித்துவிடுகிருள். இக்கரைக்குத் திரும்பிய ருக்மிணி கண்ணனின் திருவடிகள் கொப்பளித்துப்

புண்ணாகியிருப்பதைக் காண்கிறாள். கண்ணன் காரணத்தை விளக்குகிறான்: ''ராதை கொதிக்கக் கொதிக்கப் பாலைக் குடித்தாள். அவள் நெஞ்சில் அந்தச் சூடு இறங்கியது. அவள் நெஞ்சில் எப்போதும் என் திருவடிகளே நிலைத்திருப்பதனால் அந்தச் சூடு என் பாதங்களைக் கொப்பளிக்க வைத்துவிட்டது.''

* * *



அதர்வ வேதம் பல விஞ்ஞான உண்மைகளைக் கூறுகிறது— 1. உலகம் நீரால் சூழப்பட்டுள்ளது. 2. நீர் இரண்டு வாயுக்களின் சேர்க்கை; அவற்றில் ஒன்று பிராணவாயு; பிராணவாயு ஒரு பங்காகவும், மற்றொரு வாயு இரண்டு பங்காகவும் நீரில் கலந்திருக்கின்றன. 3. மின்சாரத்தை 'வித்யுத் சக்தி' என்பர். இது தாமிரத்தில் தடையின்றிச் செல்லும். நீர், கனிப்பொருள்கள், சூரியன், மற்றும் கடல் இவற்றிலிருந்தெல்லாம் மின்சாரத்தைப் பெற முடியும். நீர் மின்சாரம், அனல் மின்சாரம் இவற்றை உருவாக்கிய விஞ்ஞானம், சூரிய ஒளி, மற்றும் கடலலைகளிலிருந்து மின்சாரம் எடுப்பது பற்றி ஆராய்ச்சியில் ஈடுபட்டு வருகிறது. ஆனால், பல்லாயிரம் வருஷங்களுக்கு முந்திய அதர்வ வேதத்தில் இந்த உண்மைகள் வியத்தகு முறையில் அறுதியிட்டுக் கூறப்பட்டுள்ளன. 4. ஒரு குறிப்பிட்ட யாகத்தின்போது, ஹோம குண்டம் சந்திரனின் மண் கலந்து அமைக்கப் பெற வேண்டும். ரிஷிகள் ஒரு மந்திரத்தைச் சொல்லி சந்திரனிலிருந்து கறுப்புநிற மண்ணை நேரடியாக வரவழைப்பார்கள் என்று கூறுகிறது. சந்திரனின் மண் கறுப்பு என்பது சில வருஷங்களுக்கு முன்பே அறிந்த விஞ்ஞான உண்மை. இதுவும் நம் வேதத்தில் சொல்லப்பட்டிருப்பதைக் கண்டு வியக்கலாம்.

* * *

கடவுள் ஒரு விவசாயியைப் போல் செயற்படுகிறார். இந்தப் பூமியாகிய நிலத்தில் தர்மம், அதர்மம் என்ற விதைகளைத் தூவி, அதர்மக் களைகளைக் களைந்து, வேதம், ஸ்ம்ருதிகளை உரமாக இட்டு, ஆசாரியர்களின் உபதேசங்கள் என்ற வேலியிட்டு, இதற்கும் மேல் காவலுக்காக வயலிலேயே படுத்துக்கொள்ளும் விவசாயியைப் போல் அவரே உலகத்தில் அவதரித்து (இறங்கி வந்து) தர்மப் பயிரைக் காக்கிறார்.

* * *

ராமாவதாரத்தில் பகவான் தன்னை மறைத்துக் கொண்டு மனிதனாக வாழ முயன்றாலும், அனைவரும் அவனை இறைவன் என்று உணர்ந்து போற்றி வணங்கினர். ஆனால், கிருஷ்ணாவதாரத்தில் பகவான் தன்னை வெளிப்படுத்திக்கொண்டு, 'நான்தான் பகவான்' என்று பகிரங்கமாக அறிவித்தும்கூட அவனை இறைவன் என்று உணராமல், 'இடையன்' என்று தூற்றியும், மனிதனாக நினைத்தும் அலட்சியப்படுத்தியவர் பலர்.

* * *

நாம் சில குற்றங்கள் புரிந்தாலும், அந்தக் குற்றங்கள் இதயபூர்வமாக இல்லாமல், பேச்சளவிலோ செயலளவிலோ இருந்தால் அவற்றைப் பகவான் மன்னித்துவிடுகிறான். ஆனால் உளமார ஈடுபடாமல் உதட்டளவில் அவன் பெயரைச் சொன்னாலும், அதை ஏற்று அருள் புரிகிறான். இதுதான் அவன் கருணை.

* * *

நாம் எவ்வளவு காலம் வாழ்கிறோம் என்பது முக்கியமல்ல; வாழ்நாளில் எவ்வளவு நேரத்தை இறைவனை நினைப்பதில் செலவழிக்கிறோம் என்பதுதான் முக்கியம். பல மகரிஷிகள் கூடியிருந்த சபையில், ஏழு கல்பங்களாக வாழ்ந்து வந்த மார்க்கண்டேயர் ஏழு வயதே நிரம்பிய பராசரரின் திருவடிகளில் விழுந்து வணங்கினார். அவர் அதற்குச் சொன்ன காரணம்: ''இந்த ஏழு கல்பங்களில் நான் பகவானை நினைத்த நேரத்தைக் கூட்டிப் பார்த்தால் ஐந்து வருஷம் கூடத் தேறாது. ஆனால் பராசரரோ அவர் பிறந்ததிலிருந்து இந்த ஏழு வருஷங்களும் இடைவெளியின்றி இறைவனையே நினைத்து வாழ்கிறார். எனவே என்னைவிட அவர்தாம் பெரியவர். அவரை நான் வணங்குவதுதான் முறை.''

* * *

விஷ்ணு ஸஹஸ்ரநாமம் மகாவிஷ்ணுவின் ஆயிரம் நாமங்களைக் கூறுகிறது. இந்த ஆயிரம் நாமங்களும் அவனுடைய பத்துக் குணங்களைக் குறிக்கின்றன. ஒவ்வொரு குணத்தையும் நூறு நாமங்கள் குறிக்கின்றன. அத்துடன் இந்தப் பத்துக் குணங்களும் அவனுடைய பத்து அவதாரங்களையும் குறிக்கின்றன.



1. அநாதிநிதநம் — 'காலத்தால் அளவிட முடியாதவன்' என்று பொருள். தன்னை அளக்க முடியாத வேதங்களைக் காத்தவன் என்பதால் இந்தக் குணம் மத்ஸ்ய அவதாரத்தைக் குறிக்கிறது. மத்ஸ்யத்தின் (மீனின்) மூச்சுக்காற்று ஸாமவேதமாகவும், மீனின் வால் துடுப்புப் போல் நீரை அடித்து எழுப்பும் சப்தம் யஜுர் வேதமாகவும், மீனின் செதிள்களில் புகுந்து செல்லும் நீரின் ஓசை அதர்வ வேதமாகவும், மீனின் அகலமான கண்விரிப்பினுல் தள்ளப்பட்ட நீரின் ஓசை ரிக்வேதமாகவும் அவதார காலத்தில் விளங்கின.

2. விஷ்ணும்—தேசத்தால் அளவிட முடியாதவன் அதாவது எங்கும் வியாபித்திருப்பவன். மந்தரமலையினுல் பாற்கடல் கடையப்பட்டபோது ஆமையாக நின்று மலையின் அடிப்பாகத்தைத் தாங்கியும், தனது கையினுல் மலையின் மேற்பாகத்தைத் தாங்கியும், மலையினுல் கடையும் வலுவை இயல்பாகப் பெற்றிராதவர்களான தேவ அசுரர்களின் உடலில் வியாபித்து வலுவளித்தும், எங்கும் வியாபிக்கும் தனது தன்மையைப் பகவான் நிலைநாட்டிய அவதாரம் கூர்ம அவதாரம்.

3. ஸர்வலோகமகேச்வரம்—எல்லா உலகங்களுக்கும் ஈச்வரன். பூமியை ஹிரண்யாக்ஷனிடமிருந்து காத்து, எல்லா உலகங்களுக்கும் ஈச்வரன் தானே என்று நிலைநாட்டிய வராக அவதாரத்தை இது குறிக்கிறது.

4. லோகாத்யக்ஷம் — எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பவன். பிரகலாதன் தூணைக் காட்டியதைக் கண்டு அதிலிருந்து வெளிப்பட்டுத் தான் அனைத்தையும் கவனித்துக் கொண்டிருப்பவன் என்று நிலைநிறுத்தியது நரசிம்ம அவதாரத்தில்.

5. ப்ரஹ்மண்யம் — வேதத்தினுல் அறுதியிட்டுச் சொல்லப்பட்ட பரப்பிரம்மம். பிரம்மவித்தாக இருந்த வாமன அவதாரத்தை இது குறிக்கிறது.

6. ஸர்வதர்மஜ்ஞம்—எல்லாத் தர்மங்களையும் அறிந்தவன். பரசுராம அவதாரம்.

7. லோகாநாம் கீர்த்திவர்த்தனம் — அடி பணிந்தவர்களின் கீர்த்தியைப் பெருக்குபவன். சரணுகத ரட்சணத்தை நிலைநாட்டிய ராமாவதாரம்.

8. லோகநாதம்—உலக நாயகன். பலராம அவதாரம். (கிருஷ்ணனுக்கு முன்பே தேவகியின் கர்ப்பக்கிருகத்தில் புகுந்து வாசம் செய்து அதைக் காப்பிட்டுக் காத்துக் கிருஷ்ணனின் பெருமையை உலகுக்கு முதலில் உணர்த்தியதனுலும், கிருஷ்ணனுலேயே வணங்கப்பட்டதனுலும்.)



9. மஹத்பூதம்—எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியவன். கிருஷ்ண அவதாரம்.

10. ஸர்வபூதபவோத்பவம் — எல்லாச் சராசரங்களுக்கும் உற்பத்தி ஸ்தானமாக இருப்பவன். கல்கி அவதாரம்.

* * *

ராவணனிடம் அவனுக்கு அநுஸரணையாக இருந்த ஓர் அரக்கன், "நீ ஏன் சீதையிடம் ராமன் வேஷத்தில் சென்று அவளை வஞ்சித்து அழைத்து வரக்கூடாது?" என்றான்.

"ராமன் வேஷம் போட்டால் வஞ்சிக்க வேண்டும் என்ற எண்ணமே என் மனதில் எழமாட்டேனென்கிறதே!" என்றான் ராவணன்.

* * *

பரமாத்மாவான மகாவிஷ்ணுவுக்கு ஐந்து நிலைகள் உண்டு. இவற்றில் பரம் என்ற நிலை வைகுண்டத்தைக் குறிக்கிறது. இந்த நிலை நமக்கு எட்டாத நிலை. இது ஆவரண ஜலம் போன்றது.

அடுத்த நிலையில் சற்றே இறங்கிப் பாற்கடலில் பள்ளி கொண்டு காட்சி தருகிறான். இது வியூகம் எனப்படும். இது சமுத்திர ஜலம் போன்றது. உப்பைப் பிரித்துத்தான் அருந்த வேண்டும். இது ஞானிகளுக்கே சாத்தியம்.

இதற்கும் சற்றுக் கீழே இறங்கி அருள் பாலிக்கும் நிலை விபவம் என்பது. இந்த நிலையில் இறைவன் பூமியில் அவதரித்துப் பலவேறு காலங்களில் பலவேறு அவதார புருஷர்களாகக் காட்சி தருகிறான். ராமர், கிருஷ்ணர் முதல் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் வரை பல மனிதர்கள் அவனுடைய அவதாரங்களே. இந்த நிலையில் இறைவனைக் கண்டு களிக்க, அவதார புருஷர்களின் சமகாலத்தில் வாழ்ந்தவர்களுக்கே சாத்தியம். இது எப்போதாவது ஒரு முறையே கிடைக்கும் பாக்கியம். எனவே இது காட்டாற்று வெள்ளத்தைப் போன்றது.

இதற்கும் அடுத்த நிலை அந்தர்யாமி. இந்த நிலையில் அவன் நமது ஆத்மாவில் கலந்து நிற்கிறான். இது ஊற்றுநீரைப் போன்றது. ஆழ்ந்த பக்தியின் துணைகொண்டு மனதைத் தோண்டுபவர்களுக்கே இது கிட்டும்.

கடைசியாக அர்ச்சாவதாரமாகப் பலவேறு புண்ணியத் தலங்களில் கோவில்கொண்டு எழுந்தருளியிருக்கிறான். இதுவே எல்லாருக்கும் சுலபமான நிலை. இது கிணற்று நீரைப் போல. யாரும் எப்போதும் சுலபமாக எடுத்துப் பருகலாம்.

* * *

கீதையில் பகவான், "எனக்கு இலையோ பூவோ பழமோ அல்லது நீரோ நிவேதித்தால் கூடத் திருப்தி யடைவேன்" என்கிறான். அப்படிச் சில பேர் கொடுத்து அவனைத் திருப்திப் படுத்தியிருக்கிறார்கள்.



**இலை** கொடுத்துத் திருப்திப்படுத்தியவள் திரௌபதி. அன்று கண்ணன் கடும் பசியுடன் வந்து திரௌபதியிடம் உணவு கேட்டபோது, அட்சய பாத்திரத்தைக் கழுவி வைத்துவிட்ட அவள், அவன் விருப்பப்படி அதில் ஒட்டியிருந்த ஒரு சிறு கீரை இலையைக் கொடுக்க, அதை உண்டு பசியாறி, துர்வாசரின் கோபத்திலிருந்து பாண்டவர்களை ரட்சித்தான் கண்ணன்.

**பூ** கொடுத்தவன் கஜேந்திரன். முதலையின் பிடியில் அகப்பட்டுக்கொண்ட கஜேந்திரன் பகவானைக் கூவி அழைத்து, குளத்திலிருந்த தாமரைப்பூவைப் பறித்து உயர்த்தி அதையே பகவானுக்கு அர்ப்பிக்க, இறைவன் அதைப் பெற்றுக்கொண்டு அவனைக் காத்தான். அவன் நீட்டிய பூவைப் பெற்றுக்கொள்ளத்தான் பகவான் ஓடோடி வந்தான்.

**பழம்** கொடுத்து உபசரித்தவள் சபரி. அதுவும் அவள் எச்சிற்படுத்திக் கடித்துக் கொடுத்த பழங்களையே விரும்பி உண்டான் ராமன்.

நீர் கொடுத்தவன் லக்ஷ்மணன். அரச குலத்தைச் சேர்ந்த தான் தனது குடிமகனிடம் எதையும் பெற்றுக்கொள்ளக் கூடாது என்பதால், குகன் கொடுத்த தேனையும் மாவையும் ராமன் ஏற்கவில்லை. அப்போது லக்ஷ்மணன் தாமரைப் பூவில் நீர் சேந்திக் கொடுக்க அதை ராமனும் சீதையும் அருந்தினார்கள்.

* * *

ஆர்த்ரா என்றால் 'நனைந்த' என்று பொருள். சங்கரர், ராமானுஜர் ஆகிய இரண்டு ஆசாரியர்களும் பிறந்தது ஆர்த்ரா (திருவாதிரை) நட்சத்திரத்தில். நலிவுற்றிருந்த வேத உபநிஷத பிரம்மஸூத்ரங்களை இவர்கள் ஈரப் பசை கொடுத்து உயிர்ப்பித்தனர். இதுவே இவர்கள் இருவரும் 'ஆர்த்ரா' நட்சத்திரத்தில் பிறந்ததன் முக்கியத்துவம். இவர்கள் உள்ளமும் ஈரமானது.

*

# செய்திகள்

* திருமங்கலம், மெய்யறிவுக் கழகம் தனது 36-ஆவது ஆண்டு நிறைவு விழாவினை மார்ச் 29-ஆம் நாள் விமரிசையாகக் கொண்டாடியது. பத்திரகாளி மாரியம்மன் கோவில் முன்பு இரவு 6-30 மணிக்கு நடைபெற்ற விழாவிற்கு, சுவாமி கமலாத்மானந்தர் தலைமை வகித்து உரை நிகழ்த்தினார்.

* விருதுநகர், சக்தி சங்கத்தில் மார்ச் 30-ஆம் நாள் மாலை 6-மணிக்கு, 'உபநிஷதம்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினார்.

* செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த மேல் வரவத்தூரில் ஏப்ரல் 2, 3 தேதிகளில் நடைபெற்ற சமயப் பேரவையில் சுவாமி ரங்கநாதானந்தர் கலந்துகொண்டு சிறப்புச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்.

* சிவகாசி, சுவாமிஜி சன்மார்க்கப் பேரவை மகளிர் பிரிவில் மார்ச் 31-ஆம் நாள் மாலை, சுவாமி கமலாத்மானந்தர் 'சரணாகதி' குறித்து உரையாற்றினார்.

* சிவகாசி, சுவாமிஜி சன்மார்க்கப் பேரவையின் சார்பாகச் சிவன் கோவிலில் மார்ச் 31, ஏப்ரல் 1, 2 தேதிகளில் இரவு 7-45 முதல் 9-15 மணி வரை சுவாமி கமலாத்மானந்தரின் ஆன்மிக உரைகள் இடம் பெற்றன.

* வடக்குக் காலிபோர்னியா (ஸாக்ரமண்டோ) ஸ்ரீராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த சுவாமி சிரத்தானந்தர் இந்தியாவிற்கு விஜயம் செய்திருந்தார். ஏப்ரல் 4-ஆம் நாள் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் 'ஆன்மிக வாழ்க்கையின் மகத்துவம்' குறித்து, சுவாமி சிரத்தானந்தர் உரையாற்றினார்.

* சிவகாசி, சுவாமிஜி சன்மார்க்கப் பேரவை மகளிர் பிரிவில் ஏப்ரல் 2-ஆம் நாள் மாலை சுவாமி கமலாத்மானந்தர் 'ஸ்ரீராமகிருஷ்ண நாம மகிமை' குறித்து உரை நிகழ்த்தினார்.

* தென்காசி, ஆலங்குளத்தில் ஸ்ரீஅன்னை சாரதாமணி மழலையர் பள்ளி ஏப்ரல் 3-ஆம் நாள் தனது ஆண்டுவிழாவினைக் கலை நிகழ்ச்சிகளுடன் சிறப்பாகக் கொண்டாடியது. சுவாமி கமலாத்மானந்தர் விழாவில் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

* சிவகாசி, அன்னை சாரதாமணி மாதர் கழகம் தனது 28-ஆம் ஆண்டுநிறைவு விழாவினை ஏப்ரல் 4-ஆம் தேதி அன்னை ஸ்ரீசாரதா ஆசிரமத்தில் கலை நிகழ்ச்சிகளுடன் விமரிசையாகக் கொண்டாடியது. விழாவில் கலந்துகொண்டு சுவாமி கமலாத்மானந்தர் வாழ்த்துரை வழங்கினார்.

* பேரணம்பட்டு, பாரதமாதா நர்சரி & பிரைமரிப் பள்ளி ஏப்ரல் 4-ஆம் நாள் மாலை 6-மணிக்குத் தனது ஆண்டுவிழாவை விமரிசையாகக் கொண்டாடியது. சுவாமி குமரானந்தர் சிறப்பு விருந்தினராக இருந்து ஆசியுரை வழங்கினார். அன்று இரவு 9-மணிக்கு 'ஸ்ரீராமகிருஷ்ணர் வரலாறு' திரைப்படம் திரையிடப் பெற்றது.

# முக்தி இலக்கணம்

ராஜம் ஐயராமன்

பிரம்மம் சைதன்யமயமாக எங்கும் வியாபித்துள்ளது. சூரியன் இருந்த இடத்திலேயே இருந்து தன் கிரணங்களால் பூமண்டலத்தில் நிரம்பி வியாபித்துள்ளது. அது போலவே பிரம்ம சக்தியும் மனிதனை உள்ளும் புறமும், மேலும் கீழும் சூழ்ந்துள்ளது. இந்தப் பிரம்மத்தைச் சைவர்கள் சிவ-சக்தி என்று அழைப்பர்.

மனிதன் இந்தச் சிவ-சக்தியைத் தன் ஞானத்தினுல் உணர்ந்து வழிபட்டுச் சிவஞானத்தைப் பெற்று, தூல உடலிலிருந்து விடுபட்டு, உயிருள்ளபோதோ இறந்த பிறகோ முக்தியடைகிருன்.



இந்த முக்தி நிலையில் சீவன்முக்தி, அதிகார முக்தி, போகமுக்தி, லயமுக்தி, பரமுக்தி என்று ஐந்து நிலைகள் உண்டு. முதல் நான்கு முக்தி நிலையும் ஒன்றைவிட ஒன்று மேலான பதமுக்தி நிலையாகும். இறுதியில் உள்ள பரமுக்தியே சைவர் கூறும் 'சுத்தாத்வைத முக்தி'யாகும். முதல் நான்கு நிலையை அடைந்தவர்கள் ஆற்றலுடன் கூடியவர்களாய், மாயா, கன்ம மலங்கள் நீங்கியவர்களாக, சூட்சும தேகத்துடன் அவரவர் தகுதிக்கு ஏற்ப மண்டலேசுவரர் என்ற அதிகார பதவியில் இருப்பர்.

இந்த மண்டலேசுவரர்களைச் சைவம், அணு சதாசிவர், அட்டவித்தியேசுவரர், மந்திரிமகேசுவரர், மந்திரேசுவரர் என்று கூறுகிறது. மற்றும் சதாசிவர், மகேசன், ருத்திரன், விஷ்ணு, பிரம்மா ஆகியோர்களும் இத்தகைய பதமுக்தர்கள் என்றே சைவம் குறிப்பிடுகிறது.

மேலே கூறிய ஐந்துவித முக்திப் பதங்களை மூன்றுவிதச் சித்திகளால் எய்துவர். அவை உருவசித்தி, அருவசித்தி, அருவுருவசித்தி எனப் படும்.

உருவசித்தி - உடலோடு சிவலோகம் சென்று அடைவது உருவசித்தி எனப்படும். இவ்வாறு சென்றவர்கள் சுந்தரமூர்த்தி நாயனர், சேரமான் பெருமான் முதலியோர் ஆவர்.

அருவசித்தி - மாணிக்கவாசக சுவாமிகள் சிதம்பரச் சிற்சபையில் சென்று திருமேனியுடன் மறைந்ததை 'அருவசித்தி' என்பர்.

அருவுருவசித்தி - இந்த உடலைப் பிணமாகும் படி இங்கேயே விட்டுச் செல்லாமலும், தங்கள் உடலைச் சிவலோகத்திற்குக் கொண்டு செல்லாமலும், இருந்த இடத்திலேயே உடலைக் கர்ப்பூரம் போல் சிவஒளியில் கலக்கச் செய்தல் அருவுருவ சித்தியாகும். இவ்வாறு சென்றவர்கள் திருஞான சம்பந்தப் பெருமான், முருக நாயனர் ஆகியோர் ஆவர். இவர்கள் பரஞ்சோதியில் புகுந்து கலந்தனர்.

திருநாவுக்கரசர் சிவலிங்கத்தில் சென்று மறைந்தார். பட்டினத்தார் தமது திருமேனியைச் சிவலிங்க மேனியாக்கினர். இவர் அடைந்த நிலையைச் சிவ சாயுச்சியம் என்பர்.

இந்த உடம்பை இங்கேயே விட்டு நீங்கி இறைவனின் திருவருளில் கலந்து முக்தி அடைந்தவர்களும் உண்டு. இதற்கு உதாரணம் மெய்ப்பொருள் நாயனர், ஏனதி நாயனர், ததீசி முனிவர் முதலியோர் ஆவர்.

காயகல்பங்களை உண்டு உறுதிப்படுத்திய உடம்பானலும் ஒரு சமயத்தில் அழியும். எனவே அத்தகைய ஸ்தூல உடலைச் சூட்சுமத்தில் லயம்

செய்து, பிராணபந்தன யோகத்தில் அமர்ந்து, சிவசக்தி பீஜ மந்திரங்களை உச்சரித்து, அமுதத்தினை உண்பர். இத்தகையவர்களின் உடம்பு மகாஒளியுடன் துலங்கி, நம் போன்ற சாதாரண மானவர் கண்ணுக்குப் புலப்படாது மறைந்து உலவும் என்றும், இதனைச் சீவன்முக்தி வடிவம் அல்லது தேவதேகம் என்றும் கூறுவர்.

இத்தகைய பிரணவ வடிவமான சீவன்முக்தன் அருளுக்கும் மருளுக்கும் இடையே நின்று, இந்த உலகையும் சிவத்தையும் காண்பான் என்பர்.

மனித வாழ்வின் இலட்சியமாகிய முக்தியை அடையும்வரை இந்த உடல் தேவைப்படுகிறது. எனவே பல பிறவிகள் எடுப்பதற்குப் பதிலாக ஒரு பிறவியிலேயே காயசித்தி பெற்று முக்திக்கு உரியவர் ஆவது சிறப்பு என்று தாயுமானவர் கூறுகிறார். இதனை,

தேகம் யாதேனும் ஒருசித்தி பெறச் சீவன்முக்தி
ஆகும் நெறி நல்லநெறி ஐயா பராபரமே!

என்று பராபரக் கண்ணியில் குறிப்பிட்டுள்ளார். மேலும், இவர் குறிப்பிடும் சித்தியானது மேலே குறிப்பிட்ட மூவகைச் சித்தியுள் ஏதேனும் ஒன்றே என்பதை,

முத்தியினும் தேகமிசை மூவிதமாம் சித்திபெற்றார்
எத்தனை பேரென்று உரைப்ப தெந்தாய் பராபரமே!

என்பதன் மூலம் அறிகிறோம்.

இவ்வாறு முக்திநிலை அடைவதற்கு உரிய நெறிகள் தாசமார்க்கம் முதலான நான்கு வகைப் படும். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்றும் சொல்லப்படும். இவற்றின் பயன் சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய முக்திகள் ஆகும். முதல் மூன்றும் பதமுக்திகள், இறுதியில் உள்ளது பரமுக்தி என்று சொல்லப்படுகிறது.

செல்வம் புகழ் முதலிய உலகப் பயனை நோக்கிச் செய்யும் சிவபுண்ணியங்களை உபாயச் சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாய ஞானம் என அழைப்பர்.

பக்தி காரணமாகச் செய்யும் சிவபுண்ணியங் களை உண்மைச் சரியை, உண்மைக் கிரியை, உண்மை யோகம், உண்மை ஞானம் என அழைப்பர்.

சரியையில்—சரியை கிரியை யோகம் ஞானம்; கிரியையில்—சரியை கிரியை யோகம் ஞானம்; யோகத்தில்—சரியை கிரியை யோகம் ஞானம்; ஞானத்தில்—சரியை கிரியை யோகம் ஞானம் என்று ஒவ்வொன்றும் நான்கு நான்காய் உபாயச் சரியை உண்மைச் சரியை என்ற விதத்தில் விரிந்து முப்பத்திரண்டு வகைப்படும்.

இவ்வாறு மேலே குறிப்பிட்ட முப்பத்திரண்டு வகையான சன்மார்க்க நெறியினைக் கடைப் பிடித்து நின்றவர்களுக்குப் பயன், அவர்களின் புண்ணியங்களுக்கு ஏற்பச் சீகண்ட புவனம் முதல் சுத்த வித்தைக்குக் கீழுள்ள புவனபதி களுடைய சிவலோகத்துச் சாலோகம் முதலிய பதமுக்திகளைப் பெறுவதாகும்.

இவர்களும் திரும்ப வந்து, புவியில் பிறந்து, ஞானநிலை கூடிப் பரமுக்தி அடைதல் உண்டு என்பர். இந்த உண்மை கயிலையில் சிவ சாமீபம் பெற்றிருந்த ஆலாலசுந்தரர் பூமியில் சுந்தரமூர்த்தி நாயனாராக அவதரித்து முக்தி எய்தியதிலிருந்து தெரிய வருகிறது.



**சன்மார்க்க முக்திகள்**—மேலே கூறிய உபாயச் சரியையில், சரியை முதல் உபாய ஞானத்தின் ஞானம் ஈறுகப் பதினாறு வகைச் சிவபுண்ணியங் களுக்கும் பயன், அவற்றிற்கேற்பக் காலாக்கினி ருத்திரர் முதல் சீகண்ட புவனத்தின் கீழுள்ள ருத்திரர் ஈறாக அந்த அந்தப் புவனபதிகள் உலகில் சாலோகம் முதலியவற்றைப் பெறுவ தாகும்.

உண்மைச் சரியையில், சரியை முதல் உண்மை யோகத்தில் ஞானம் ஈருகிய பன்னிரண்டு வகைச் சிவ புண்ணியங்களுக்கும் பயன், அவற்றுக்கு ஏற்பச் சீகண்ட புவனம் முதல் சுத்த வித்தைக்குக் கீழுள்ள புவனபதிகளுடைய சிவ லோக சாலோகம் முதலிய பதமுக்திகளைப் பெறுவதாகும்.

உண்மை ஞானத்தில், சரியை முதல் மூன்று வகைச் சிவபுண்ணியங்களுக்கும் பயன், அவற்றிற்கேற்பச் சீகண்டபுவனம் முதல் சுத்த வித்தைக்குக் கீழுள்ள புவனபதி நிலைகளைப் பெறுவதாகும். இவை அனைத்தும் பதமுக்தி நிலை என்று சொல்லப்படுகிறது.

ஞானத்தில் ஞானம் என்பதற்குப் பயன் பர முக்தியாகும்.

மேலே குறிப்பிட்டபடி பதமுக்தி அடைந்தவர் அந்த அந்தப் புவனங்களில் அதிகாரம் பெற்றிருப்பர்.

**மந்திரேசுரர்** - இவர் சுத்தவித்தியா தத்துவத்திலிருக்கும் சப்த கோடி மகா மந்திரர் ஆவர்.

**அட்ட வித்தியேசுரர்** - அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தர், சீகண்டர், சீகண்டி ஆகிய எட்டுப்பேரும் அட்ட வித்தியேசுரர் எனப்படுவர். ஈசுவரத் தத்துவத்தில் இருக்கும் ஈசுவரனைச் சூழ்ந்திருந்து மாயையின்கீழ் உண்டாகிய சிருஷ்டி முதலிய செயல்களைச் சிவனுடைய ஏவலால் செய்வர். இவர்களும் அபரமுக்தி பெற்றவர்களே ஆவர்.

அணுசதாசிவர் — பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காரணர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேசுவரர், அம்சு ஆகிய பத்துப் பேரும் அணுசதாசிவர் என்ற பெயரில் உள்ளனர். இவர்கள் சாதாக்கியத் தத்துவத்திலே சதாசிவ மூர்த்தியைச் சூழ்ந்திருந்து சேவித்துக்கொண்டு போகங்களைப் புசிப்பர். இவர்களும் அபர முக்தர் ஆவர்.

இவர்கள் எல்லாரும் விஞ்ஞானகலராக இருந்து பதமுக்தி பெற்று இத்தகைய பதவியை அடைகிறார்கள் என்று சைவசமயம் கூறுகிறது.

இது தவிர, நட்சத்திரப் பதவிகளும் உண்டு என்று சொல்லப்படுகின்றது. அவை சப்த ரிஷி மண்டலம் எனப்படுகின்றன. அவை முறையே கிழக்கில் உள்ளது மரீசி எனவும், இவருக்கு மேற்கே வசிட்டர் எனவும், இவருக்கும் மேற்கில் சிறிது உயரத்தில் காண்பது அங்கிரர் எனவும், அதற்கும் மேற்கே உள்ள நான்கினில் வடகிழக்கில் அத்திரி எனவும், அவருக்குத் தெற்கில் புலஸ்தியர் எனவும், அவருக்கு மேற்கே ஒளி செய்வது புலகர் எனவும், அவருக்கும் வட மேற்கே இருப்பவர் கிரது எனவும் கூறுவர்.

மேலும், சிவபெருமானின் நித்திய கைலாச வாசத்தோடு கூடிய முனீசுவரர்கள் 'நித்திய முத்தர்கள்' என்று அழைக்கப்பெறுகிறார்கள். இவர்கள் அனைவரும் காலக்கிரமத்தில் பரமுக்தி நிலையைப் பெறுகிறார்கள்.

இவ்வாறு இந்த உலகில் வாழும் சீவன்முக்தர் முதல் பரமுக்தி யடைந்தவர் வரையில் பல படித்தரங்களில் முக்திபேதங்கள் உண்டு என்று சைவசமயம் கூறுகிறது. ★

---

கோபம் என்பது மனிதனுடைய விவேகத்தை அழித்து அவனை மிருகமாக்கிவிடுகிறது.

—ராஜாஜி

கீர்த்திக்கு உறுதி கொடை. இன்பத்திற்கு ஊன்றுகோல் நல்லொழுக்கம். விவரிக்க இயலாத வானத்தைவிடப் பரந்தது தாயன்பு.

—பழமொழித் தொகுப்பு

மனச்சாட்சியே அவரவருக்குக் காவலாக நின்றால், நாடு மாசற்று விளங்கும். ஒரு நாட்டிற்கு ஆயுதப் படையினும் அறவோர்க் கூட்டமே முக்கியத் தேவையாகும்.

—சுத்தானந்த பாரதி

# அருள்நெறிக் கதை

## மூன்று ஆடைகள் போதும்

நாடோடி

நல்ல குளிர்காலம். பகவான் புத்தர் வைசாலி நகரை நோக்கி நடந்துகொண்டிருந்தார். அவருடைய சிஷ்யர் அநேகர் அவரைத் தொடர்ந்தனர்.

புத்தர் திரும்பிப் பார்த்தார். எல்லோரும் பெரிய பெரிய மூட்டைகளைத் தலையிலும் இடுப்பிலும் கக்கத்திலும் சுமந்து வந்து கொண்டிருந்தனர். அத்தனையும் அவர்களுடைய ஆடைகள்.



எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட்டு வந்த துறவியருக்கு இத்தனை ஆடைகள் அவசியம்தானா என்று புத்தர் ஒரு கணம் யோசித்தார். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர் போல மேலே நடந்தார்.

வைசாலியிலுள்ள மடத்தை அன்று மாலை போய்ச் சேர்ந்தார்கள். இரவின் முதல் ஜாமம் ஆரம்பித்திருந்தது. வழக்கமாக மடத்திற்குள் படுத்து உறங்கும் புத்தர் அன்றைக்கு வெளியே வந்து ஒரு துணியைத் தரையில் விரித்துப் படுத்தார்.

நல்ல குளிர் அடித்துக்கொண்டிருந்தது. அந்தக் குளிருக்குத் தாம் அணிந்திருந்த ஆடை போதும் என்று அவருக்குத் தோன்றவில்லை. ஆகவே அவர் தம் மாற்று ஆடை ஒன்றைக் கொண்டு போர்த்திக்கொண்டார்.

முதல் ஜாமம் முடிந்து இரண்டாவது ஜாமம் ஆரம்பமாயிற்று. அப்பொழுது குளிர் பின்னும் அதிகரித்தது. ஆகவே இன்னோர் ஆடையைக் கொண்டு தம்மைப் போர்த்திக்கொண்டார்.

இரண்டாவது ஜாமம் முடிந்து மூன்றாவது ஜாமம் ஆரம்பித்தது. அப்பொழுது குளிர் பின்னும் அதிகரித்தது. ஆகவே புத்தர் மூன்றாவது மாற்று உடையைக் கொண்டு தம்மைப் போர்த்திக்கொண்டார். அதற்குப் பிறகு குளிர் சிறிது சிறிதாகக் குறைய, பொழுது விடிந்தது.

அடுத்த நாள் காலை, புத்தர் தம் சிஷ்யர்களைப் பார்த்து, ''குளிரிலிருந்து உங்களைப் பாது காத்துக் கொள்ள மூன்று மாற்று ஆடைகள் இருந்தால் போதும். அதற்கு மேல் வைத்துக் கொள்வது தவறு'' என்று சொன்னார். ○

## அணிலின் விடாமுயற்சி

நாடோடி

உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று தவம் செய்யப் போன புத்தர் வெகு நாள் யோசனை செய்தார். உண்மை புலப்பட வில்லை. ஆகையால் மனம் உடைந்து வீடு திரும்பலாம் என்று நினைத்தார்.

அப்பொழுது ஒரு குளக்கரையில் ஓர் அணில் தன் வாலைத் தண்ணீரில் தோய்ப்பதையும், பிறகு வாலில் ஒட்டிக்கொண்டிருக்கும் துளிகளைத் தரை யில் உதிர்ப்பதையும் பார்த்தார்.

''அணிலே! எதற்காக இப்படிச் செய்து கொண்டிருக்கிருய்?'' என்று புத்தர் கேட்டார்.

''நான் இந்தக் குளத்தை வற்ற அடிப்பதற்காக இப்படிச் செய்துகொண்டிருக்கிறேன்'' என்று பதில் வந்தது.

''அது முடிகிற காரியமா? நீ கோடி தடவை இப்படிச் செய்தாலும் குளத்தை வற்ற அடிக்க முடியாதே!''

''அதற்காக நான் முயற்சி செய்யாமலிருக்க முடியுமா? விடாமுயற்சி செய்து பார்த்தால் தானே முடியுமா முடியாதா என்பது புரியும்?'' என்று கேட்டது அணில்.

இதைக் கேட்டதும் புத்தர் வீட்டிற்குத் திரும்புவதை நிறுத்தினர். ''இன்னும் விடா முயற்சி செய்து பார்ப்போம். அப்பொழுது உண்மை கட்டாயம் புலப்படும்'' என்று எண்ணி, உண்மையைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கினர். ○

## சாஸ்திர அறிவும் அனுபவ அறிவும்

த. காவேரி

முன்ஞெரு காலத்தில் பண்டிதர்கள் நான்கு பேர் யாத்திரை செய்யப் புறப்பட்டனர். அந்தக் காலத்தில் சாப்பாட்டு வசதி வழியில் கிடைப்பது அரிது. எனவே அவர்கள் தத்தமக்குத் தேவையான உணவையும் எடுத்துக்கொண்டு வழி நடந்தார்கள்.

உச்சிப்பொழுது வந்தவுடன் ஓர் மரத்தடியைக் கண்ட அவர்கள் பசிக்கு உணவருந்திய பின் மேற்கொண்டு செல்லலாம் என்று நினைத்தார்கள். அவர்களுள் ஒருவர், ''உணவருந்துவதற்கு முன்பு குளிக்க வேண்டும் என்று நம் சாஸ்திரம் கூறுகிறது'' என்ருர்.

உடனே உணவுப் பொட்டலங்களை ஓரிடத்தில் வைத்து அவர்களுள் ஒருவரை அதற்குக்காவலாக வைத்து மற்ற மூவரும் குளிக்கச் சென்ருர்கள்.

ஒருவர் மட்டும் உணவிற்குக் காவலாக இருந்தார். போனவர்கள் திரும்பக் காலதாமதமாகிக்கொண்டே இருந்தது. இவருக்கோ பசி காதை அடைத்தது. எனவே இவர், தாம் கொண்டு வந்த பொட்டலத்தை முதலில் காலி செய்தார். பின்பும் பசி அடங்கியபாடில்லை. அடுத்தவருடைய உணவையும் எடுத்துச் சாப்பிட்டார். இவ்வாறு எல்லோருடைய உணவையும் இவர் ஒருவரே காலி செய்துவிட்டார். உண்ட மயக்கத்தில் அயர்ந்து உறங்கியும் விட்டார்.



நீராடச் சென்ற மூவரும் பசியுடன் வந்தனர். உறங்கிக்கொண்டிருந்தவரை எழுப்பித் தங்களது உணவைக் கேட்டனர். அதற்கு அவர், 'அஹம் வைச்வாநரோ பூத்வா' என்ற கீதை சுலோகத்தைக் கூறினர். ''நான் அக்கினியாக இருந்து நான்கு விதமான உணவுகளை ஜீரணிக்கிறேன் என்று பகவான் கீதையில் கூறியுள்ளார். பகவானுடைய காரியம் நடந்துள்ளது'' என்ருர்.

'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்' என்றபடி. பசியுடன் வந்த மூன்று பண்டிதர்களுக்கும் எல்லாம் பறந்து போய்விட்டன. 'பசி வந்தால் கோபமும் தானே வரும்' என்பதற்கேற்ப அவர்களுக்குக் கடுங்கோபம் வந்தது. கம்புகளை எடுத்துக்கொண்டு வந்து மூன்று பேரும் சேர்ந்து உணவை உண்டவரை நையப் புடைத்தார்கள். அடிக்கும்போதே கீதையில், 'நைநம் சிந்தந்தி' என்ற சுலோகத்தைக் கூறிக்கொண்டே அடித்தார்கள். ''இந்த ஆன்மாவைக் கத்தி கொண்டு காயப்படுத்த முடியாது, நீர் அதனை நனைக்காது, தீ அதனை எரிக்காது, காற்று உலர்த்த முடியாது'' என்று கூறினர்கள்.

வெறும் சாஸ்திரஞானம் கொண்ட அந்தப் பண்டிதர் தம்மை வைச்வானரனுகக் கூறினர். எனவே மற்ற மூன்று பண்டிதர்களும் அவர் மேற்கோள் காட்டிய அதே சாஸ்திரத்திலிருந்து தாங்களும் மேற்கோள் காட்டி அவருக்குப் பாடம் கற்பித்தார்கள்.

இப்படிப்பட்ட அறிவு ஆண்டவனை அறிய உதவாது. அனுபவ அறிவு ஒன்றுதான் ஆண்டவனை அறிய, அவரை அடைய, நமக்கு உதவும். △

# சங்கரர் ஆற்றிய பணி

வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

### பகவத்பாத சங்கரர்

'ப்ரஸ்தானத்ரயம்' எனப்படும் உபநிஷதங்கள், பகவத்கீதை, பிரம்ம ஸூத்திரங்கள் ஆகிய வற்றிற்கு ஈடு இணையற்ற அரும் பெரும் பாஷ்யத்தைச் செய்து நமக்கு அருளிய ஜகத் குருவிற்கும் 'சங்கரர்' என்றே பெயர் வழங்கி வருகிறது.

### பெயர்ப் பொருத்தம்

இதற்குப் பலர் பல விதமான காரணங்கள் கூறியுள்ளனர். அவற்றுள் பின்வருமாறு ஒருவர் காரணம் கூறியிருக்கிறார்—

> யத் பச்யதாம் சிசுரஸௌ குருதே ஸமக்ர்யம்
> தேநாக்ருதாஸ்ய ஜநக: கில சங்கராக்யாம் |
>
> யத் வா சிராய கில சங்கரஸம்ப்ரஸாதாத்
> ஜாதஸ் ததோ வ்யதித சங்கரநாமதேயம் ||

1. இந்தக் குழந்தை பிறந்தது முதலே தனது அழகிய தோற்றத்தால் தன்னைப் பார்க்க வருகிற யாவருடைய கண்களுக்கும் சுகத்தையே அளித்து வந்த காரணத்தால் இந்தக் குழந்தைக்கு அதன் பிதாவான சிவகுரு 'சங்கரர்' என்ற பெயரைக் காரணப்பெயராகவே வைத்திருக்க வேண்டும்.

2. இல்லாவிட்டால் பிள்ளைப் பேற்றுக்காகத் தாம் வெகு நாளாய்த் தவமிருந்த தன்மை நோக்கித் தம்மிடம் அருள் சொரிந்த கைலாஸ பதியான சங்கரனின் பிரசாதத்தினால் தமக்கு இந்தக் குழந்தை பிறந்துள்ள காரணத்தால் அதன் பிதாவான சிவகுரு இந்தப் பெயரை வைத்திருக்க வேண்டும் என்பது இதன் பொருள். இன்றுவரை அந்தப் புண்ணிய தினத்திலேயே ஆசார்ய ஸ்ரீசங்கர பகவத்பாதர்களது ஜயந்தி மகோத்ஸவம் வருஷந்தோறும் யாவராலும் கொண்டாடப்பெற்று வருகிறது என்பது யாவரும் அறிந்ததே.

### இந்தச் சங்கரரே சங்கரர்

ஒவ்வொரு வகையில் இந்தக் காரணங்களும் பொருத்தமாக இருப்பதோடு உண்மையான வேறு சில காரணங்களும் உண்டு. அவற்றுள், 'சங்கர: சங்கர: ஸாக்ஷாத்—சங்கரர் சிவனின் நேரிடையான அவதாரம்' என்ற வசனப்படி,



கைலாசபதியான சங்கரரே சிவகுருவிற்குக் குழந்தையாக இந்த உலகில் அவதரித்த காரணம் பற்றியே இந்தக் குழந்தைக்கு இந்தப் பெயர் வைக்கப்பட்டது என்பதும் ஒன்றாகும். இந்த விஷயத்தில் சிவரஹஸ்யம் போன்ற நூல்களி லுள்ள கீழ்க்காணும் ச்லோகங்களும் பிரமாண மாகும்—

> மதம் ச ஜாதம் தேவேசி கலாவபி
> தபோதநம் |
> கேரளேஷு ததா விப்ரம் ஜநயாமி
> மஹேச்வரி ||

ஓ தேவியே! கேரளத்தில் எனது அம்சம் பொருந்திய ஒரு பிராம்மணனைத் தோற்று விக்கிறேன்.

> கேரளே சலகக்ராமே விப்ரபல்யாம் மதங்கஜ |
> பவிஷ்யதி மஹாதேவி சங்கராக்யோ
> த்விஜோத்தம ||

கேரளத்தில் சலகம் என்னும் ஒரு பிராம்மணக் கிராமத்தில் சங்கரர் என்னும் உத்தமமான பிராம்மணர் அவதரிக்கப் போகிறார்.

**மாநுஷீம் தநுமாச்ரித்ய சங்கராசார்ய -- நாமிகாம் |**
**சதுர்பி: ஸஹ சிஷ்யைச்ச பூரயிஷ்யே மனோரதம் ||**

நான் சிஷ்யர்களோடு சங்கராசார்யர் என்னும் மானிட உருவத்தில் தோன்றி உன் எண்ணத்தை நிறைவேற்றுகிறேன்.

இவ்வாறு லோகசங்கரரான சங்கரரின் அவதாரமானதால், ஆதிசங்கரரும் லோக சங்கரராகவே இருந்தது மிக மிகப் பொருத்த மானதே. அது எப்படி எனில், ஷண்மத ஸ்தாபனுசார்யராக இருந்து உலகத்திற்கு மற்ற வர் போன்று உலக இன்பங்களை அடைவதற்கான வழிகளை வகுத்துக் கொடுத்திருக்கிருர். அத்வைத மத ஸ்தாபனுசார்யராக இருந்து உலகிற்குப் பேரின்பத்தை அடைவதற்கான வழியையும் வகுத்துக் கொடுத்திருக்கிருர். ஆகவேதான் இவரும் லோகசங்கரராக மதிக்கப்படுகிருர் என்பதை உணர வேண்டும்.

**நன்மை செய்வதற்கு உரிய மூன்று வகைகள்**

உலகிற்குப் பொதுவாக மூன்று விதங்களில் நன்மை செய்யலாம். 1. உலக நன்மைக்குத் தீயவர்களின் ஆக்கிரமிப்பால் 'ஆதிபௌதிகம்' எனப்படும் தீங்கு ஏற்படும்பொழுது அவர்களைத் தண்டிப்பதன் மூலம் அந்தத் தீமையை விலக்கி நன்மையைச் செய்யலாம். இந்த முறையில் உலகில் நன்மை செய்வதற்காகவே ராமாவ தாரம், கிருஷ்ணுவதாரம் போன்ற இறைவனின் அவதாரங்கள் தோன்றின என்பது யாவரும் அறிந்ததேயாகும்.

**யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத |**
**அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ||**

பார்த்தா! எவ்வெப்போது தர்மத்திற்குக் குறைவும் அதர்மத்திற்கு எழுச்சியும் உண்டா கின்றனவோ அவ்வப்போது நான் என்னைப் படைத்துக்கொள்கிறேன்.

**பரித்ராணுய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் |**
**தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே**

சாதுக்களைக் காப்பதற்கும் துஷ்டர்களை அழிப் பதற்கும் தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் யுகந் தோறும் வந்து உதிப்பேன் என்பன போன்ற பகவத் வாக்கியங்கள் இந்தக் கருத்தையே உறுதிப்படுத்துகின்றன. இங்கே தர்மம் என்பது, உலக நன்மையையும், அதர்மம் என்பது உலகிற்கு ஏற்படும் தீமையையுமே குறிப் பிடுகின்றன.

2. அதிவிருஷ்டி (பெருமழை), அநாவிருஷ்டி (மழை இல்லாத நிலை) போன்ற பெரிய உத்பாதங்களால் உலகிற்கு 'ஆதிதைவிகம்' எனப்படும் தீங்கு ஏற்படும்போது அவற்றை விலக்கி அவர் அவர்களுக்குத் தேவையான பொருள்களைக் கொடுப்பது போன்ற காரியங் களின் மூலமும் நன்மையைச் செய்யலாம். இம் முறையில் உலகிற்கு நன்மையைச் செய்வதற் காக அவ்வப்பொழுது பல வள்ளல்களைப் பகவான் தோற்றுவிக்கிருர்.

3. அறியாமையால் ஏற்படும் தடுமாற்றங் களால் மக்கள் தாமே நெறிதவறி நடப்பதனுல் உலக நன்மைக்கு 'ஆத்யாத்மிகம்' எனப்படும் தீங்கு ஏற்படும்பொழுது தத்துவோபதேசம் செய்து அறியாமையை விலக்கி நன்னெறியில் மக்களை நடக்கச் செய்வதன் மூலமும் நன்மையைச் செய்யலாம். இந்த முறையில் உலக நன்மையின்பொருட்டுப் பகவான் அவ்வப் போது நாயன்மார்களையும் ஆழ்வார்களையும் மற்றும் பல அனுபூதிமான்களையும் தோற்று வித்தார். அவ்வாறு தோன்றியவர்களுள் ஆதி சங்கரரும் ஒருவராவர்.

ஆதிசங்கரர் விஷயத்தில் இந்தக் கருத்தைப் பல காலமாக நிலைநாட்டும் ஒரு ச்லோகம் நம் நாட்டில் பல காலமாக வழங்கி வருவதையும் யாவரும் அறிவர்.

அஜ்ஞாநாந்தர்கஹநபதிதாநாத்மவித்யோப தேசை:
த்ராதும் லோகாந் பவதவசிகாதாப பாபச்யமாநாந் |
முக்த்வா மௌநம் வடவிடபிநோ மூலதோ நிஷ்பதந்தீ
சம்போர் மூர்த்திச் சரதி புவநே சங்கராசார்யரூபா ||

அறியாமையால் ஸம்ஸாரம் என்னும் காட்டில் விழுந்து உழல்பவர்களைக் காப்பதற்காக, மௌனத்தை விட்டு, ஆலமரத்தடியிலிருந்து கிளம்பி, சங்கராசார்யர் என்னும் உருவத்தில் ஆத்மவித்யோபதேசம் செய்துகொண்டு சிவ மூர்த்தியே ஸஞ்சாரம் செய்துகொண்டிருக்கிறது.

# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1982 மே & ஜூன் மாத நிகழ்ச்சிகள்

ஸ்ரீசங்கரர் ஜயந்தி : 1—5—82 சனிக்கிழமை
பொதுக் கூட்டம் : மாலை 5-30 மணிக்கு
தலைவர் : சுவாமி கபீரானந்தர்
பேசுபவர் : திரு ஆர். கோதண்டராமன்

ஸ்ரீராமானுஜர் ஜயந்தி 2—5—82 ஞாயிறு
பொதுக் கூட்டம் : மாலை 5-30 மணிக்கு
தலைவர் : சுவாமி கபீரானந்தர்
பேசுபவர் : திரு டி. ஸி. நரசிம்மராகவாசார்யார்

ஸ்ரீ புத்த ஜயந்தி 7—5—82 ஞாயிறு
பொதுக் கூட்டம் : மாலை 5-30 மணிக்கு
தலைவர் : சுவாமி கபீரானந்தர்
பேசுபவர் : பிரம்மசாரி முத்துக்குமார்

ஸ்ரீ பலகாரிணி காளிபூஜை 22—7—82 சனி } மாலை வழிபாட்டிற்குப் பிறகு பூஜை நடைபெறும்.

சத் சங்கம் : ஞாயிறுதோறும் மாலை 4-மணி முதல் 5-30 மணி வரை
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (23—5—82 & 6—6—82 & 20—6—82)

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (மே 16, 30 & ஜூன் 13, 27)

### சொற்பொழிவுகள்—தமிழ்

1. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் (16—5—82 & 13—6—82)
   திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் (23—5—82 & 20—6—82)
   திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள்

3. இராமாயணம் — திரு ஆர். கோதண்டராமன் (30—5—82 & 6—6—82 & 21—6—82)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் 'பக்தி ரத்னாவளி' என்ற தலைப்பில் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

### வாரநாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம் — சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — தேவிமாஹாத்மியம் — சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் — இராமாயணம் — சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் — பகவத்கீதை — பிரம்மசாரி சின்மய சைதன்யா
5. வெள்ளி — துளசி ராமாயணம் — சுவாமி வீதபயானந்தர்
6. சனி — அத்யாத்ம ராமாயணம் — ஜஸ்டிஸ் டி. ராமகிருஷ்ணன் (8—5—82 & 5—6—82)

மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7-மணிக்கு 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் சனிக்கிழமைகளில் சுவாமி கபீரானந்தர் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**விசேஷ தினங்கள் :** 3—5—82 & 19—5—82 & 2—6—82 & 17—6—82 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

**வேறு சில நிகழ்ச்சிகள் :**

எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் மாலை 4-15 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'ஸ்ரீசாரதாதேவியார்' என்ற தலைப்பில் சொற்பொழிவு நிகழ்த்துவார். இடம் : 18, 1-ஆவது லேன், சாஸ்திரி நகர், சென்னை-20.

மே 9, 23 & ஜூன் 13, 20 ஆகிய தினங்களில் காலை 9-30 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'தியானம்' என்ற தலைப்பில் சொற்பொழிவு நிகழ்த்துவார். இடம்: 10, ராஜம்மாள் வீதி, லட்சுமிபுரம், ஷெனாய் நகர், சென்னை-30.

மாதந்தோறும் இரண்டாவது சனிக்கிழமைகளில் மாலை 5-30 மணிக்கு, சுவாமி விபுதானந்தர் உரை நிகழ்த்துவார். இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம், சென்னை-10.

மாதந்தோறும் முதல் ஞாயிற்றுக்கிழமையும் மூன்றாவது ஞாயிற்றுக்கிழமையும் காலை 10 மணிக்கு சுவாமி விபுதானந்தர் உரை நிகழ்த்துவார். இடம் : ஸ்ரீராமகிருஷ்ண - விவேகானந்த மன்றம், அரக்கோணம்.

மாதந்தோறும் கடைசி ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 5-30 மணிக்கு, சுவாமி விபுதானந்தர் உரை நிகழ்த்துவார். இடம் : 34/1, எண்ணூர் நெடுஞ்சாலை, சென்னை-19.

மாதந்தோறும் மூன்றாவது ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 9-30 மணிக்கு 'ஸ்ரீராம கிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் திரு வி. ராமமூர்த்தி உரை நிகழ்த்துவார். இடம் : H 28 F காமராஜர் நகர், திருவான்மியூர், சென்னை-41.

மாதந்தோறும் கடைசி ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 9-30 மணிக்கு, பெரம்பூர் அன்னதான சமாஜத்தைச் சேர்ந்த சுவாமி விவேகானந்தர் நூற்றாண்டு நினைவு மண்டபத்தில் 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் திரு வி. ராமமூர்த்தி உரை நிகழ்த்துவார்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்,
**ஸ்ரீராமகிருஷ்ண மடம்**
சென்னை - 600 004

தொலைபேசி
71231






ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தர், துணை ஆசிரியர்: கமலாத்மானந்தர்.

பதிப்பாளர்: சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை–600 004.

அச்சிடுபவர்: கே. எல். செல்லப்பன், சுத்தானந்த அச்சகம், சென்னை-600 020.

